  

॥ 𑌶𑍍𑌰𑍀𑌃 ॥

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤 𑌮𑌹𑌾 𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.

ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன் அருளிச்செய்த

பதினைந்தாவது ரஹஸ்யமான

# ஸ்ரீ ஹஸ்திகிரிமாஹாத்ம்யம்.



தனியன்கள்.

𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌃 𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌕𑍇𑌸𑌰𑍀 ।
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌯𑍋 𑌮𑍇 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌤𑍍𑌤𑌾𑌂 𑌸𑌦𑌾 𑌹𑍃𑌦𑌿 ॥
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 ।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑍍 ॥

சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.



𑌸𑌾𑌨𑌾𑌥𑍍𑌯𑌂 𑌸𑌹𑌿𑌤𑌂 𑌸𑌹𑌾𑌨𑌟𑌜𑌟𑌾𑌵𑌯𑍁𑌞𑍍𑌜𑌿𑌯𑍁𑌤𑍍𑌰𑌣
𑌕𑍍𑌷𑍀𑌭𑌾𑌵𑌸𑌾𑌰𑌵𑌿𑌸𑌾𑌰𑌜𑌸𑌹𑌿𑌷𑍍𑌣𑍁 𑌜𑌨𑍍𑌮𑌾𑌸𑍍𑌵𑌦𑌂 𑌤𑌤𑍍𑌵𑌦𑍌 ।
𑌸𑌾𑌤𑍍𑌜𑍍𑌜𑌾𑌚𑌮𑍍 𑌸𑌳𑌿𑌸𑍍𑌣𑍁 𑌨𑌸𑍇𑌣 𑌵𑍁𑌧𑌾𑌰𑌵𑍃𑌧𑍀𑌰𑌕
𑌶𑍍𑌰𑍇𑌣𑍀𑌶𑍈𑌵𑌲𑌵𑌾𑌰𑌿𑌜𑌾𑌤𑌕𑌲𑌿𑌕𑌾𑌵𑌶𑍍𑌯𑌾𑌃 𑌶𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑍇 ॥

॥ ஸ்ரீ: ॥

॥ ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: ॥

॥ ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸ ராமாநுஜ மஹாதேசிகாய நம: ॥

திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத் விஷயம்
பண்டித பூஷணம் தேசிக தர்சநாசார்யர்
ஸ்ரீ உப. வே. மஹாமஹோபாத்யாய
நரஸிம்மாசார்யர் ஸ்வாமியின்

# வ்யாக்யானம்.

---

## அவதாரிகை.

ஹஸ்திகிரி - யானையினுடைய மலை, மாஹாத்ம்யம் – பெருமை, யானை மலையினுடைய பெருமையை நிரூபிக்கும் க்ரந்தம் ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் என்னப்படுகிறது. இந்திரனுடைய வாஹனமான ஐராவதம் நெடு நாள் தவம் செய்து மலை ரூபமாக எம்பெருமானைத் தரித்துக் கொண்டிருப்பதினால் ஹஸ்திகிரி என்கிற திருநாமம். அன்றிக்கே கஜேந்திராழ்வான் பகவானுடைய திருவடித்தாமரைகளில் தாமரை புஷ்பங்களை ஸமர்ப்பித்து உஜ்ஜீவித்தபடியினால் ஹஸ்திகிரி என்கிற திருநாமமாகவுமாம். அதுவுமன்றிக்கே

‘திங்நாகைராதிதஸ்தத்ர பகவாந் விஷ்ணுஸ்ஸநாதந: |
ததோ ஹஸ்திகிரிர் நாம்நா க்யாதிராஸீந் மஹாகிரே: ॥’

என்கிறபடியே திக்கஜங்கள் ஆராதித்த க்ஷேத்திரமாகையினால் ஹஸ்திகிரி என்கிற திருநாமமாகவுமாம்.

எல்லா இடத்திலும் தன்னுடைய பூர்ண சக்தியுடன் வ்யாபித்திருக்கும் பகவான் ஒரு க்ஷேத்திர விசேஷத்திலே ஸாந்நித்யம் பண்ணியருளி தன்னுடைய குணங்களை ப்ரகாசம் செய்கிறனாகையாலே அப்படி ஸாந்நித்யம் செய்தருளிய க்ஷேத்திரத்தைக் கொண்டே அந்த எம்பெருமானை ஆழ்வார்கள் அநுஸந்தித்துப் போந்தார்கள். அப்படி ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்தருளிய க்ஷேத்திரங்களே திவ்ய தேசங்கள் என்கிற ஏற்றம் பெற்றவைகளாயிருக்கும். அப்படிப்பட்ட ஆழ்வார்களில் ப்ரதானரான நம்மாழ்வாரைக் கூடஸ்தராகவுடைய ஸ்ரீ வைஷ்ணவர்கள் எல்லோரும் அந்தத் திவ்ய தேசங்களிலேயே பகவத் பாகவத கைங்கர்யாதிகளைப் பண்ணிப்போருகிறார்கள்.



அப்படிப்பட்ட க்ஷேத்திரங்கள் எல்லாம் நமக்கு உத்தேச்யமேயாகிலும் அவற்றில் சில பகவானுடைய இன்னம் சில விசேஷ கார்யங்களினால் ப்ரதானதமங்களாய் நிற்கும். அவைகளாவன:— எம்பெருமான் லோக ஸம்ரக்ஷணார்த்தமாக தானே ஒரு அபிநவமாக தசாவதாரம் செய்யத் திருவுள்ளம் பற்றி பொய்கை முனி பூதத்தார் பேயாழ்வார் என்கிற முனி த்ரய ரூபமாய் அவதரித்த காலத்தில் அவர்கள் மூவரையும் அநுக்ரஹித்தருளிய க்ஷேத்திரமான திருக்கோவலூர் ஒன்று. பதிவர் பாடும் பெருமாள் என்கிற ஏற்றம் பெற்றவராய் ஸ்ரீமந் நாதமுனிகள் துடக்கமாய் ஸ்ரீ தேசிகன் வரையிலான ஆசார்ய பரம்பரையிலுள்ள ஆசார்யர்களில் ப்ரதானரானவர்களுக்கு விசேஷ அநுக்ரஹங்களைச் செய்தருளிய பகவான் ஸேவை ஸாதிக்கும் க்ஷேத்திரமான திருவரங்கம் பெரிய கோயில் ஒன்று. ஆசார்ய பங்க்திக்கு சிரோ பூஷணமாய் ஸ்ரீ ரங்கநாதனால் பஹுப்ரகாரமாக பஹுமானிக்கப்பட்ட ஸ்ரீ தேசிகனுக்கு அடியிலே அடியவர்க்கு மெய்யன் அருள் புரிந்த க்ஷேத்திரமாகிய அயிந்தை மாநகர் ஒன்று. ஸ்ரீமந் நாத முனிகள் மூலமாய் இந்த ஸம்ப்ரதாயம் ப்ரவ்ருத்தமாவதற்குக் காரணமாயிருந்த ஆராவமுதாழ்வான் ஸேவை ஸாதிக்கும் க்ஷேத்திரமான திருக்குடந்தை ஒன்று.

இப்படி நம் பூர்வாசார்யர்களுக்கு விசேஷ உபகாரம் செய்தருளிய ஆகாரத்தினாலே திவ்ய தேசங்களுக்கு ஒரு பெருமை ஏற்பட்டாப்போலே திவ்ய தேசங்கள் அல்லாத க்ஷேத்திரங்களில் சில நம் ஆசார்யர்களால் அங்கு தங்களுக்கு உண்டான விசேஷ பகவத் கடாக்ஷத்தை முன்னிட்டு பஹுமானிக்கப்பட்டிருக்கும். அவைகள் காஞ்சீபுரம், மதுராந்தகம், திருநாராயணபுரம் முதலியவையாகும்.

இவற்றில் முதலில் சொல்லப்பட்ட க்ஷேத்திரத்திற்கு ஹஸ்திகிரி என்கிற மற்றொரு திருநாமம். ஹஸ்திகிரி க்ஷேத்திரம் பூதத்

தாழ்வாராலும் கலியனாலும் மங்களா ஸாஸனம் செய்யப்பட்ட ஏற்றம் பெற்றதாயிருந்த போதிலும் அந்த மங்களா ஸாஸனம் அங்கு மலையடிவாரத்தில் ஸேவை ஸாதிக்கும் அழகிய சிங்கர் விஷயம் என்றும் ஸ்ரீ தேவாதி ராஜன் விஷயமானதல்ல என்றும் பூர்வர்கள் நிஷ்கர்ஷித்தார்கள். ஆகிலும் சிலர் அந்த மங்களா ஸாஸனம் ஸ்ரீ தேவ ராஜனைப் பற்றியது என்று நிர்வஹிக்கப் பார்க்கிறார்கள். இது உசிதமல்ல. ஏனெனில் ஸ்ரீ தேஸிகன் தாமே ஸ்ரீ வரத ராஜ பஞ்சாஸத்தில்

'யஸ்யா நுபாவமதிகந்து மஸக்நுவந்தோ முக்தாஸ்த்ரயீ ஜயின ஸ்ச முநிப்ரவேகா:'

என்று அருளிச்செய்திருக்கிறார். இங்கு 'முக்தாஸ்த்ரயீ' என்றது பகவானுடைய எண்ணிறந்த கல்யாண குணங்களைக் கணக்கிடுகிறேன் என்று கம்பீரமாக ப்ரதிஜ்ஞை செய்து, ஒரு குணத்தைக் கூடப் பூர்ணமாக வர்ணிக்க முடியாமல் கை சோர்ந்து

'யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ'

என்கிறபடியே வெட்கித் திரும்பி வந்த வேத புருஷன் படியைப் பரித்யஜித்து, முதலடியிலேயே 'உயர்வற உயர் நலமுடையவன்' என்று ஆரம்பிக்கும்படியாக மயர்வற மதி நலமருளப்பெற்ற ஆழ்வார்கள் என்றபடி. 'முநிப்ரவேகா:' என்றது முனிவர்களுக்குள் உத்க்ருஷ்டரான ஆழ்வார்கள் என்றபடி. 'மாசில் மனம் தெளி முனிவர் வகுத்ததெல்லாம் மாலுகந்த வாசிரியர் வார்த்தைக்கொவ்வா' என்றிறே இவ்வாசார்யன் தாமே ப்ரதேஸாந்தரத்தில் அருளிச்செய்திருப்பது. இப்படி ஆழ்வார்கள் மஹர்ஷிகளைக் காட்டிலும் உத்க்ருஷ்டர்கள் என்றது ஒரு விஸேஷமல்ல. ஆஹார ஸுத்தியே மோக்ஷ ஸாதனமான கர்மங்களில் வாக்யகாரரினால் முதலில் உதாஹரிக்கப்பட்டது. ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் கலந்த ஆஹாரத்தை உட்கொள்ளுகிறமனுஷ்யர்களைக்காட்டிலும் ஆறு குணங்கள் நிறைந்த அன்னத்தைப்புஜிக்குமவர்களுக்கு வ்யாவ்ருத்தி ஓதப்பட்டதிறே. கேவலம் இலைமுதலிய வகைகளைப் புஜிக்கும் ரிஷிகளைக் காட்டிலும் உண்ணும் சோறுபருகு நீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ண னென்றிருந்தவரான ஆழ்வார் உத்க்ருஷ்டராகையாலே அவரே முனி ஸார்வபௌமர் என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறார் என்றபடி. இப்படிப்பட்ட விஸேஷ



மஹிமையையுடைய ஆழ்வார்களும் ஸ்ரீ தேவாதிராஜனைப் பார்த்து, அவருடைய வடிவழகில் ஈடுபட்டு மோஹத்தை அடைந்தபடியினால் அவர் விஷயமாகக் கவி பாடினார்களில்லை. அதாவது ஆழ்வார்களின் மங்களா ஸாஸனம் ஸ்ரீ தேவப் பெருமாளுக்கு இல்லை என்பதை இப்படி நிரூபித்தருளினாராயிற்று.

ஆகிலும் சிலர் ஸ்ரீ தேஸிகன் ஸ்ரீ த்ரமிடோபநிஷத் ஸாரத்தில்

'வரதவிஷயபூர்வ பரிவாரணஸக்தோ ஹி ஜோ த்ரேணோ: ப்ரத்யமே ஸேவ்யத்வம் ப்ரதமே ஸதகே வீக்ஷ்ய வரதம்'

என்று அருளிச்செய்திருப்பதைக் கொண்டு திருவாய்மொழி முதல் பத்து முழுவதும் ஸ்ரீ தேவப் பெருமாள் விஷயம் என்று நிர்வஹிக்கப் பார்க்கிறார்கள். இங்கு ப்ரயோகிக்கப்பட்டிருக்கும் 'வரதம்' என்கிற பதம் ரூடி ஸக்தியினால் ஸ்ரீ தேவாதி ராஜனைச் சொல்லுகிறது என்று இவர்களுடைய அபிப்பிராயம். வரத்தைக் கொடுப்பவன் வரதன் என்கிற யோக வ்யுத்பத்தியே ப்ரஸித்தம். பகவானுடைய எண்ணிறந்த திருநாமங்களில் ஒன்றுக்காவது யோக வ்யுத்பத்தி கூடாமல் ரூடி ஸக்தியினால் நிர்வஹிக்க வேண்டிய ஸ்ரமம் கிடையாது. ஆழ்வார்களும் அந்தந்த திவ்ய தேஸத்தைக் கொண்டே அந்தந்த எம்பெருமானை நிரூபித்தார்களத்தனை போக்கி ரூடியான திருநாமத்தை ஓரிடத்திலும் ப்ரயோகித்தார்களில்லை. மூல க்ரந்தத்தில் வேறு திவ்ய தேஸம் ப்ரஸ்தாவிக்கப்பட்டு இருக்க, அதற்கு விருத்தமாக ஸ்வாமியின் ஸங்க்ரஹத்திற்கு அர்த்தம் சொல்லுவது உசிதமாகாது. 'அயர்வறுமமரர்களதிபதி' இத்யாதி பதங்கள் இன்னம் அனேகம் திவ்யதேஸங்களிலும் ஸார்த்தமாகுமாகையினால் அவைகளைக்கொண்டு நிர்வஹிக்கப் பார்ப்பதும் யுக்தமாகாது. உபாய ஜ்ஞானவிஷயத்தையும் பல ப்ரதத்வ ரூப உபேய ஜ்ஞான விஷயத்தையும் நிரூபிப்பதே இந்த ப்ரகரணத்திற்கு உசிதம். அந்த இரண்டு ஆகாரங்களுமே இங்கு

'ஸேவ்யத்வம்', 'வரதம்'

என்று அருளிச்செய்யப்பட்டிருக்கின்றன என்பதே யுக்தமாகும்.

'யஸ்யாஸேஷ தத்ரஜந்த்தூத்தாராம் ஸலக்ஷ்மீதா யா வித்த்வேஷ்டாரம் ஹோஜஷிஜயா கிம் விதது ஹா

ஜ்ஞாயஸித்ருவத்ருதே’

என்கிறபடியே இல்லாததை இருப்பதாக நிரூபித்து ஒரு பெருமை பெறப் பார்ப்பது ப்ராந்த க்ருத்யமாகும் என்றிறே நிர்ணயிக்கப்பட்டது.

இப்படியாகில் ஸ்ரீ தேவப்பெருமாளுக்கு மஹிமை குறையாதோ என்னில், அவருடைய மஹிமைக்கு வேறு காரணங்கள் இருக்கிறபடியினாலே குறைவு வாராது. சக்ரவர்த்தித் திருமகனிடத்தில் அதிக ஈடுபாடுடைய பட்டரை ‘பெருமாளுக்கு எல்லா வித மேன்மைகள் இருந்தும் கண்ணனுக்குப் போல ஸாரத்ய தூத்யாதிகளைச் செய்தருளிய ஏற்றம் இல்லையே’ என்று கேட்க, அவரும் ‘அது அவருடைய தவறுதலன்று, ஜகத் ப்ரஸித்தி பெற்ற இக்ஷ்வாகு வம்ஶத்தில் முடி சூடப் பிறந்த அவரை தூத்யாதிகளைச் செய் என்று ஒருவரும் சொல்லாமையினால் அவர் அதை இழக்கும்படி நேரிட்டதேயன்றி அவருடைய குணங்களின் தாழ்வினாலல்ல’ என்றிறே நிர்வஹித்தது. அதைப் போல இங்கும் ஆழ்வார்கள் ஸ்ரீதேவப்பெருமாளுடைய பரிபூர்ண ஶோபையில் ஈடுபட்டு, அது வாசாமகோசரமாக இருந்ததினால் அதை வர்ணிக்காமல் போய்விட்டபடியினாலே ஸ்ரீ தேவப் பெருமாளுக்கு ஒரு குறைவும் வாராது.

மேலும் கொங்குப் பிராட்டியை ‘பரதத்வம் எதுவாயிருக்கும்’என்று சிலர் கேட்க, அவளும் ‘எம்பெருமானார் காடிச்சால் மூலையில் தெய்வத்தைத் தொழுதால் அதுவே நமக்குப் பரமோத்தேஶ்யமாகும்’ என்று அருளிச்செய்தாள் என்பது ப்ரஸித்தமிறே. துல்ய ந்யாயத்தினாலே அந்த எம்பெருமானாரும் அவருடைய திருவுள்ளக் கருத்தை ஸதாசார்யோபதேஶத்தால் அறிந்து அதை ப்ரதிஷ்டாபனம் செய்தருளிய ஸ்ரீ தேஶிகனும் உகந்தருளிய பெருமாள் என்கிற விஶேஷத்தை உடையவராகையினால் ஸ்ரீ தேவப்பெருமாள் நமக்குப் பரமோத்தேஶ்யராவார். ஆனாலும் அவர்களும் காரணமில்லாமல் அபிமானித்தார்களில்லை. எங்ஙனே என்னில்:—கீழில் நிரூபித்தபடி நம்முடைய ஸம்ப்ரதாயத்தை ப்ரவசனம் செய்வதில் விஶேஷ உபகாரம் செய்தருளிய எம்பெருமான்களையே நம் பூர்வர்கள் விஶேஷித்து ஆதரம் செய்தார்கள். இந்த ஆகாரம் ஸ்ரீ தேவப்பெருமாள் இடத்தில் பூர்ணமாக இருப்பதைப் பற்றி அவர்கள் அப்படிக் கௌரவித்தார்கள். அந்த உபகாரங்கள் எவை என்னில், அவைகள் நிரூபிக்கப்படுகின்றன.



முதல் முதலில் வையமெல்லா மறை விளங்க வாள் வேல் ஏந்தி நின்ற கலியன் ஒரு ஸமயத்தில் கப்பம் கட்டவில்லையென்று அரசனாலே கைதியாக்கப்பட்டபொழுது, அவருடைய ஸ்வப்னத்தில் தோன்றி, அவரைக் காஞ்சிபுரத்திற்கு வரவழைத்து, தனம் இருந்த இடத்தைக் காட்டியருளி உபகரித்தது ஸ்ரீ தேவ ராஜனே. அநந்தரம் எம்பெருமானார் யாதவ ப்ரகாஶனுடைய சூழ்ச்சிக்குத் தப்பி ஓடி இரவில் வழி தெரியாமல் திகைத்து நிற்கும்பொழுது வேடன் ரூபமாய் தோன்றி அவரைக் காஞ்சீபுரம் அழைத்து வந்தது ஸ்ரீ தேவாதிராஜனே. பிறகு பெரிய முதலியாரை நேரில் ஆஶ்ரயிக்க முடியாமல் பண்ணிய ஸ்ரீரங்கநாதனை வெறுத்து, காஞ்சீபுரம் திரும்பி வந்து, மேலே செய்ய வேண்டுவது எது என்று நிஶ்சயிக்க முடியாமல் கவலைப்பட்டுக்கொண்டிருந்த எம்பெருமானாருடைய ஸந்தேஹங்கள் தீரும்படி திருக்கச்சி நம்பிகள் மூலமாய் ஆறு வார்த்தைகளை அருளிச்செய்து, அவர் ஸம்ப்ரதாய ப்ரவசனத்தில் உத்யுக்தராம்படி செய்தருளியதும் ஸ்ரீதேவப்பெருமாளே. இதற்கப்புறம் ஆசார்ய ஶ்ரேஷ்டரான ஸ்ரீ தேஶிகனை அன்றே அடைக்கலம் கொண்டதும் நம் அத்திகிரித் திருமாலேயல்லவா. ஆசார்யனுக்குப் புத்திரனாய் அவதரித்ததும் ஸ்ரீதேவாதிராஜனிறே.

இவ்வளவு விஶேஷ அனுக்ரஹங்களையும் செய்ததற்கும் காரணம் பேரருளாளருடைய பரம க்ருபையேயாகையினால் அத்தை நிரூபிக்கத் திருவுள்ளம் பற்றி, ஸ்ரீ ராமனுடைய பெருமையைப் பரக்க நிரூபித்து, பகவானுடைய ஏற்றத்திற்குக் காரணம் பிராட்டியாகையாலே

‘ஸீதாயாஶ்சரிதம் மஹத்’

என்று மஹர்ஷி நிரூபித்ததோபாதி, ஸ்வாமியும் பேரருளாளனுக்கு இவ்வளவு க்ருபை உண்டானதும் இந்த க்ஷேத்திரத்தின் பெருமையேயாகையினால் இந்த ஸ்ரீ ஸூக்திக்கு பேரருளாளர் மாஹாத்ம்யம் என்காமல் ஸ்ரீ ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் என்று திருநாமம் சாற்றியருளினார் என்பது அறியத்தக்கது. இந்த க்ரந்தத்தில் மேலே விஸ்தாரமாக நிரூபிக்கப்போகிற அர்த்தத்தை ஸூசிப்பித்துக்கொண்டு

இந்த ப்ரபந்தத்திற்கு விஷய ப்ரயோஜன அதிகாரிகளையும் காட்டா நின்று கொண்டு மங்களாசரணம் செய்தருளுகிறார்—'ஊநாஹூ' என்றாரம்பித்து.

ப — ரை. ] உஹதா — பெரியவர்களான ப்ருஹ்மாதிகளுக்கும், ஊநாஹூ — பூஜிக்கத்தக்கதான, உஹா நட — நர்த்தனம் செய்பவர்களுக்குள் உத்க்ருஷ்டரான ருத்திரனுடைய, ஜடா — ஜடையின், வயூஞ — நாலுபக்கங்களிலும், நியூநண — தடை இல்லாமல் இருக்கிற, க்ரீஊா — விளையாட்டினால், வாஸ — அழகான, ஸிஸ ராஜ — ஸமுத்திர ராஜனுக்கு, உஹிஷீ — பத்னியாகிய கங்கைக்கு, ஜநாஸஃ — உத்பத்தி ஸ்தானமாயும், வநார — ஸேவிக்கிற, வைநாரக — தேவதைகளினுடைய, ஶ்ரேணீ — வரிசைகளின், ஶேவர — ஶிரஸ்ஸுக்கு அலங்காரமாயிருக்கிற, வாரிஜாதகளிகா — பாரிஜாத மொக்குக்களினால், வஹூா — ஶிரோ பூஷணத்தை உடையதுமான, ஊதஜாவு — ஸ்ரீ ஹஸ்திகிரியின், உளஹி — ஶிகரத்திற்கு, உணூந — அலங்காரமாயிருக்கிற, உணெஃ — ரத்னமாகிய பேரருளாளருடைய, தஃ — அப்படிப்பட்ட, வஃ — திருவடியை, ஸஂஊாஉஹ — ஸ்தோத்திரம் பண்ணக்கடவோம்.

தா — ம். ] 'ஊநாஹூ உஹதா' என்றது ஜ்ஞான ஶக்தி களினால் மிகவும் உயர்ந்தவர்களான ப்ருஹ்ம ருத்திராதிகளுக்கும் அளவிட்டறியவொண்ணாமையாலே 'பிறையேறு சடையானும் நான் முகனும் இந்திரனும் இறையாதல் அறிந்தேத்த வீற்றிருத்தல் இது வியப்பே' இத்யாதிகளிற்படியே அவர்களுடைய ஸ்தோத்திரத்திற்கு விஷயமானவன் என்றபடி. 'உஹா நட' இத்யாதி — இத்தால் ஸகல லோகங்களுக்கும் பாவன தமமான கங்கைக்கும் அப்படிப்பட்ட பாவனத்வத்தை உண்டாக்கக் கூடிய பெருமையை உடையது பகவானுடைய திருவடி என்றபடி. 'ஊதஜாவு' இத்யாதி — ஸர்வ வஸ்துக்களிலும் பரிபூர்ணமாயிருக்கும் வஸ்து அதை விட்டுப் பரிச்சின்னமாயிருப்பதொரு தேஶ விஶேஷத்திலே ஸாந்நித்யம் பண்ணி வர்த்திப்பதும், அதற்கு மேலே ஸர்வ விபூதிகளுக்கும் நாதனும்,



அவைகளைத் தனக்கு இருப்பிடமாயும் உடைய தான்

'ஸ்வாயீந விஶ்வவிஹவஂ ஹ஗வநு விஶேஷாஃ ஃவாஂ தெவநாயகஊஶஜி வாராவரஜாஃ'

என்று இவர் தாமே அருளிச்செய்திருக்கிறபடியே ஸ்ரீ ஹஸ்திகிரி நாதன் என்கிற திருநாமம் பூண்டு,

'ஷிரஉ ஶிவரி வீஊா ஸஃவாநு வஃயொநெஃ'

என்கிறபடியே தனக்கோர் இருப்பிடமில்லாமல் அல்பமான ஒரு தேஶ விஶேஷத்தைத் தனக்கு ஒரு இருப்பிடமாகவும், அத்தாலேயே தான் ஒரு குடியிருப்புப் பெற்றவனாக நினைத்திருக்கையும், அதற்கு மேலே ஸர்வ வஸ்துக்களுக்கும் ஶேஷியான தான் ஒரு பர்வதத்தின் ஶிகரத்திற்கு அலங்காரமாய் நின்று அதற்கு ஶேஷபூதனாய் நிற்கையும், 'வட மாமலை உச்சியை' என்கிறபடியே ஹஸ்திகிரிக்குத் தன்னை ஶேஷமாக நினைத்திருக்கை முதலியவையும் தெரிவிக்கப்பட்டதாகிறது.

'ஊதஜாஹூள உஊதகஊஶிஂ வஊஷணீ'

என்று இவர் தாமும் அனுஸந்தித்தாரிறே. 'வநார' இத்யாதியால் போக்யத்வாதிஶயம் வ்யஞ்ஜிதமாயிற்று. இந்த ஶ்லோகத்தில் 'ஊநாஹூ' என்பதினால் ப்ருஹ்மாவினால் ஆராதிக்கப்பட்ட சரித்திரமும், 'உஹா நட' இத்யாதியால் வேகவதியின் கோபாவேஶத்தினால் உண்டான க்ருபா விஶேஷமும், 'ஜநாஸஃ' என்பதினால் அந்தப் பெரிய நதியினுடைய ஆடம்பரங்களை அடக்கின வ்ருத்தாந்தமும், 'ஊதஜாவு' இத்யாதியால் ப்ருஹ்மாவினுடைய அஶ்வமேத யாகத்தின் முடிவில் உத்தர வேதியில் ஆவிர்ப்பவித்து, அவருடைய ப்ரார்த்தனைக்கு இணங்கி ஸகல மனுஜ நயன விஷயதாங்கதனாய் இருக்கும் தன்மையும், 'வநார' இத்யாதியால் தத் காலத்தில் ஸர்வ தேவதைகளினாலும் ஸேவிக்கப்பட்டிருந்த பெருமையும் ஸூசிதமாகிறபடியினாலே வக்ஷ்யமாணார்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டதாகிறது. இத்தால் இந்த க்ரந்தத்திற்கு விஷயம் பேரருளாளருடைய க்ருபையும் அதின் மூலமாக அவன் திருவடிகள் என்றும், ப்ரயோஜனம் அவனுடைய திருவடிகளை ஸதா அனுபவிக்கை என்றும், அதிகாரிகள் மஹான்கள் என்றும், ஸம்பந்தம் அந்தத் திருவடியின் மஹிமையை ப்ரதிபாதித்து அதின் மூலமாக அந்தத் திருவடிகளின் நித்யானுபவத்தைப் பெறுகை என்றும் நிரூபிக்கப்பட்டதாகிறது.

வாழியருளாளர் வாழியணி அத்திகிரி
வாழி யெதிராசன் வாசகத்தோர்—வாழி
சரணாகதி யென்னும் சார்வுடன் மற்றொன்றை
அரணாகக் கொள்ளாதாரன்பு. 1

இப்படிக் கீழ் ஶ்லோகத்தினால் மங்களா சாஸனம் செய்தருளி, அதில் நிரூபிக்கப்பட்ட அர்த்த விஶேஷங்களுக்குக் காரணத்தை நிரூபித்தருளுகிறார்—'வாழி' என்றாரம்பித்து.

ப—ரை.] அருளாளர் — க்ருபா குணத்தையே தமக்கு நிரூபகமாக உடைய ஸ்ரீ தேவப்பெருமாள், வாழி — வாழ வேண்டும், அணி—பூமிக்கு அலங்காரமான, அத்திகிரி — ஹஸ்திகிரி, வாழி, யதிராசன்—ஸ்ரீ பாஷ்யகாரருடைய, வாசகத்தோர் — ஸ்ரீ ஸூக்திகளையே தங்களுக்குக் காலக்ஷேபமாக உடையவர், அதாவது பகவத் ராமானுஜஸ்ரீஸூக்திநிஷ்டர்கள், வாழி, சரணாகதி என்னும் — ஶரணாகதி என்று சொல்லப்படுகிற, சார்வுடன் — உபாயத்தோடு, அதாவது அதற்கு ஸமமாக, மற்றொன்றை — வேறு ஒன்றையும், அதாவது தன்னையும் பக்த்யாதிகளையும், அரணாக — தங்களுக்கு ரக்ஷகமாக, கொள்ளாதார் — அங்கீகரியாதவர்களுடைய, அன்பு — விஶ்வாஸம், வாழி. 1

தா—ம்.] 'அருளாளர்' என்றது க்ருபையினால் ஆளுகிறவன், அதாவது இவ்வுலகங்களை ரக்ஷிக்கிறவன், அன்றிக்கே அத்தால் நிரூபிக்கப்படுமவன் என்றபடி. 'ஹ்ஸாத வரதஸ்ய தயா'

என்கிறபடியே பரத்வம் ஸ்வரூபத்தை விட்டுக் கழற்றவொண்ணாமையாலே ஸ்வரூபத்தைப் பற்றிக் கிடக்கும்; தயை மற்ற எல்லாக் குணங்களிலும் ஸ்வரூபத்திலும் விஞ்சியிருக்கும் என்றபடி. ஆழ்வாரும் முதலடியிலே 'உயர்வற உயர் நலம் உடையவன்' என்று அநந்த கல்யாண குணங்களையும் அனுபவித்து, இரண்டாவது அடியில் அவைகள் எல்லாவற்றிற்கும் மேற்பட்டதான தயா குணத்தைத் தனித்து நிரூபித்தாரிறே. நம் பூர்வர்கள் எல்லோரும் அருள் கொண்டாடும் அடியவர்கள் என்பதை இவர் தாமே ஸ்ரீ தயா ஶதகத்தில்

'கருணாவாஸகாரண்யேண காங்க்ஷிந:'

என்றருளிச்செய்தாரிறே. அத்தையே இங்கும் நிரூபித்தாராயிற்று.



அன்றிக்கே க்ருபையினால் ஆளப்பட்டவர், அதாவது அதற்கு வஶப்பட்டவர் என்றபடியாகவுமாம். இவ்வர்த்தத்தையும் இவர் தாமே

'ஸ்வாயீந வ்ருஷகிரீஶம்'

என்று ஸ்ரீ தயாஶதகத்தில் அருளிச்செய்திருக்கிறார். எம்பெருமான் க்ருபைக்கு வசப்பட்டிருப்பதினால் தன் இஷ்டப்படி செய்யவொண்ணாதிறே.

'வயாஹ்ருவி காகுத்ஸ்த: க்ருவயா வயர்வானுயக'

என்று மஹர்ஷியும் அனுஸந்தித்தான். 'விதி சூழ்ந்ததால் எனக்கேல் அம்மான் திரிவிக்கிரமனையே' என்றதும் இங்கனுஸந்தேயம். இத்தால் 'ஶாநாஹம்' இத்யாதிக்குக் காரணம் காட்டப்பட்டதாகிறது. 'கேழ்த்த சீர் அரன் முதலாக் கிளர் தெய்வமாய்க் கிளர்ந்து சூழ்த்தமரர் துதித்தால் உன் தொல் புகழ் மாசூணாதோ' என்றாரிறே. 'அணி அத்திகிரி' என்றது பூமண்டலத்திற்கு அலங்காரமான ஸ்ரீ ஹஸ்திகிரி என்றபடி. அந்த ஹஸ்திகிரிக்கும் ஓர் அலங்காரமாகவிறே பகவான் இருப்பது. இத்தால் 'ஶாதஜாவஞ' இத்யாதிக்குக் காரணம் காட்டப்பட்டதாகிறது. 'யதிராசன் வாசகத்தோர்' என்றது

'நிவிர்ஷ்டம் யதிஸாவர்ஹளஶவவஸாஶாவ்ருத்திஹி யர்ள வநம்'

என்று இவர் தாமே அனுஸந்தித்தபடி எம்பெருமானாருடைய ஸ்ரீஸூக்திகளினாலேயே தங்களுடைய காலத்தையெல்லாம் போக்குமவர்களாகையாலே அவற்றையே தங்களுக்கு நிரூபகமாக உடையவர்கள் என்றபடி. இத்தால் 'ஶஹதாம்' என்பதற்குக் காரணம் காட்டப்பட்டதாகிறது. ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஸ்ரீ ஸூக்திகளைப் பரிசயம் செய்த மஹான்கள் அந்தப் பகவானுடைய திருவடித் தாமரைகளைத் தவிர மற்றொன்றையும் நெஞ்சாலும் நினையார்களிறே. தனித்தனியே ஆகியெனு வகை நம் போதமரும் திருமாதுடன் நின்ற புராணனைச் சாற்றினர் இவரேயிறே. 'வாழி சரணாகதி' இத்யாதி—'வாழி அருளாளர்' என்று ஆரம்பித்த ஸ்வாமி மஹா விஶ்வாஸத்தின் பெருமையை வெளியிடுவதற்காக இங்கு ஒரு பாட்டின் பாதியால் அதை நிரூபித்தாராயிற்று. இது 'பொய்கை முனி' என்று தொடங்கி மற்ற ஆழ்வார்களை அனுஸந்தித்து கலியனுடைய பெருமையை 'வையமெல்லா மறை விளங்க' இத்யாதி ஒரு பாதத்தில் அருளிச்செய்ததற்கு ஒக்

ஸகல லோக ஹித தத்வ விஷய விவித வேதாந்தோ
பப்ரும்ஹணங்களான புராணங்களில் உத்க்ருஷ்டதமா

---

கும் என்று நம் ஆசார்யன் பணிக்கும். 'சார்வுடன்' என்றது ஶர ணாகதியாகிற உபாயத்துடன் கர்ம யோகம், ஜ்ஞான யோகம், பக்தி யோகம் முதலியவைகளை ஸாக்ஷாத்தாகவும் விளம்ப ரஹிதமாகவும் மோக்ஷோபாயமாக நினையாதார் என்று ஶரணாகதியின் ப்ரபாவத்தை வெளியிட்டதாகவுமாம்.

'நிஷ்கிஞ்சந ஸ்வ யந்த்ரா'

என்றது இங்கனுஸந்தேயம். அன்றிக்கே ஶரணாகதியுடன் கூட கர்ம யோகாதிகளையும் சேர்த்து, அவனுடைய திருவடியைத் தவிர மற்றொ ன்றையும் எண்ணாதவர்கள் என்றபடி. 'சாதகனும் என் வசமாய் என் னைப் பற்றும் சாதனமும் சரண நெறி அன்றுமக்கு சாதனங்கள் இந் நிலைக்கு ஓர் இடையில் நில்லா' என்றும்,

'ஸர்வதேவ ப்ராஜஜாத்ருக்ஷம்'

என்றும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறபடியே பேரருளாளரான அந்த எம்பெருமானைத் தவிர வேறு ஒரு உபாயத்தை அவனுக்கு ஸமமாகக் கொள்ளாதவர்களுடைய மஹா விஶ்வாஸம் என்றபடி. அவர்களு டைய அன்பிற்கு விஶேஷமாவது லோகத்தில் பலத்திலும் அதற்கு ஸாதனமான உபாயங்களிலும் அன்பு வெவ்வேறு பட்டிருக்கும், ப்ர பன்னனுக்கு ப்ராப்யமும் ப்ராபகமும் ஒன்றாகையினாலே

'ஸக்ஷ பக்தி விசிஷ்டதே'

என்கிறபடியே எல்லா விதமான அன்பும் அவனேயாயிருக்கையே. இப்படி உபாயமும் பலனும் அவன் என்றேற்படுகிறபடியினாலே 'தஸ் வதம்' என்பதும் வ்யாக்யாதம். 1

இப்படி மங்களா சரணம் செய்தருளி மேல் வாக்யங்களினாலே தாம் நிரூபிக்கப் போகிற சரித்திரத்தின் ஸங்க்ரஹத்தையும், அது எவ் விடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது என்பதையும், இப்படித் தாம் ஸங் க்ரஹிப்பதற்கு ப்ரயோஜனத்தையும் அருளிச்செய்துகொண்டு பாகவ தர்களை ஸாவதானமாகக் கேட்கும்படி ஆஶாஸிக்கிறார்—'ஸகல' என்றாரம்பித்து. ஸகலலோக – எல்லா லோகங்களுக்கும், ஹித தத்வவிஷய – உயர்ந்த நன்மையைப் பற்றிச் சொல்லுகிற, விவித –



கையாலே முற்பட எண்ணப்பட்ட ப்ரஹ்மாண்ட புரா
ணத்தில் ஸத்யவ்ரத க்ஷேத்ர மாஹாத்ம்ய ரூபத்தாலே
ஸந்தர்ஶிதமான பேரருளாளன் பெருமையை பாவுக
ரான பாகவதர்களுடைய ஹ்ருதய ரஞ்ஜனார்த்தமாக மந
ஸ்ஸிலே பாவமும் வாக்கிலே ராகமும் கரத்திலே
தாளமுமாக பாவ ராக தாளங்களை வகுத்த பரதஶா

---

அனேகம் விதங்களான, வேதாந்த – வேதாந்தங்களின் அர்த்தங்களை, உபப்ரும்ஹணங்களான – விஶதமாக நிரூபிக்கிற. 'உத்க்ருஷ்டதமா கையாலே' இத்யாதி—

'அப்யர்ஹிதம் பூர்வம்'

(எது உயர்ந்ததோ அதை முதலில் சொல்லவேண்டும்) என்கிற ந்யாயப் படி முற்படச் சொல்லப்பட்டதாகையினால் இது எல்லாப் புராணங்க ளிலும் உத்க்ருஷ்டமானது என்றபடி. 'புராண' என்பதற்கு

'ஸர்கஶ்ச ப்ரதிஸர்கஶ்ச வம்ஶ மந்வந்தராணி ச । ஸர்வே
ஷ்வேதேஷு கத்யந்தே வம்ஶாநுசரிதம் ச யத் ॥'

என்று புராண ரத்னத்தில் லக்ஷணம் நிரூபிக்கப்பட்டது. ஸ்ரீ ஸ்தோ த்ர பாஷ்யத்தில் இவர் தாமே புராண என்கிற பதத்திற்கு

'பரேண விதுஷா நேதேபி ஸம்ஹிதி நவத்வாத்பு
ராணத்வம் | விராநாஹததேவி அபருவஸ்நித்ய
நாஹாவ்யஹித்யத்:| அநாதி வேதிகாயத்விஷயதயா வி
ப்ராந்தநேஹ: புராதநத்வா ஆபுராணத்வம் | யதோ
க்தம் வாயவே—'ப்ரதமம் ஸர்வ ஶாஸ்த்ராணாம் புரா
ணம் ப்ரஹ்மணோதிதம் | அநந்தரம் ச வக்த்ரேப்யோ வேதா
ஸ்தஸ்ய விநிஸ்ஸ்ருதா: ॥' — இதி'

என்று அர்த்தம் அருளிச்செய்திருப்பது இங்கு அனுஸந்தேயம். ஸந் தர்ஶிதமான – காட்டப்பட்ட. பாவுகரான – ரஸிகர்களான, பாகவதருடைய – பாகவதர்களுடைய, ஹ்ருதயரஞ்ஜனார்த்த மாக – மனதில் ஸந்தோஷம் உண்டாவதற்காக. வகுத்த – விஸ்தார மாக நிரூபிக்கப்பட்டிருக்கிற, பரதஶாஸ்த்ரத்தின்படியே – பரதமு

ஸூத்ரத்தின்படியே பண்ணும் இசையும் திகழப் பார்க்கின்றோம். இத்தைக் குறிக் கொண்டு கேட்டருள்வீர்மின்.

எண்டிசையும் கடலேழும் மலைகளேழும்
ஈரேழு வையகமும் படைத்திலங்கும்
புண்டரிகத்தயன் புணர்த்த பெரிய வேள்விப்
புனித நறும் போக்கியத்தை உகந்து வந்து

னியால் செய்யப்பட்ட பரத ஶாஸ்த்ரத்தின்படியே. பண்ணும் – கானமும், இசையும் – ஷட்ஜாதி ஸ்வரங்களும், திகழ – ப்ரகாஶிக்கும்படி. அவை ப்ரகாஶிக்கையாவது

‘ தஸ்மாத் காயேத ந ஷேயம் ’

என்று ஸாமாந்யமாக நிஷேதம் இருந்தபோதிலும்

‘ ஹரிகீர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம |
பாஷாகாநம் ந காதவ்யம் ’

என்று தனித்துச் சொல்லப்பட்டிருக்கிறபடியே பகவத் குணானுபவத்தில் அந்வயித்து நிற்பது. இவ்வர்த்தத்தை இவர் தாமே

‘ஸாஷாமீதிஃ ப்ரஶஸ்தா ஸமவதி ’

என்று அருளிச்செய்திருப்பது இங்கு அநுஸந்தேயம். குறிக்கொண்டு – ஸாவதானமாக.

இப்படி வாக்யங்களினால் நிரூபிக்கப்பட்ட பேரருளாளருடைய பெருமை எப்படிப்பட்டது? ஸத்யவ்ரதக்ஷேத்ர மாஹாத்ம்யத்தில் அது எப்படி ப்ரகாஶிதமாகிறது? அது பாகவதோத்தமர்களுக்கு எப்படி ரஞ்ஜகமாகிறது? என்றிவை முதலியவைகளை நிரூபித்தருளுகிறார் —‘ எண்டிசையும் ’ என்றாரம்பித்து.

ப – ரை. ] எண்டிசையும் - எட்டுத் திக்குகளையும், கடலேழும் – ஏழு ஸமுத்திரங்களையும், மலைகள் ஏழும் – ஏழு குல பர்வதங்களையும், ஈரேழு – பதினான்குகளான, வையகமும் – லோகங்களையும், படைத்து – ஸ்ருஷ்டித்து, இலங்கும் – ப்ரகாஶிக்கிற, புண்டரிகத்து – பகவானுடைய திரு நாபீ கமலத்தில் உண்டான, அயன் – ப்ரும்மா, புணர்த்த



தொண்டையெனு மண்டலத்தி னடுவிற் பாரில்
தூநில மெய் விரதத்தில் தோன்றி நின்ற
கொண்டலருட் குணமே நாம் கூறுகின்றோம்
கூர் மதியீர் குறிப்பாகக் கொண்மினீரே. 2

– அனுஷ்டித்த, பெரிய – மஹத்தான, வேள்வி – அஶ்வமேத யாகத்திலே, புனித – பரிஶுத்தமான, நறும் – வாஸனையுடன் கூடிய, போக்கியத்தை – போக்யமான ஹவிஸ்ஸை, உகந்து – ஆசைப்பட்டு, வந்து – பரமபதத்தில் இருந்து இங்கு ஆவிர்ப்பவித்து, பாரில் – பூமியில், தொண்டையெனு மண்டலத்தின் – தொண்டை மண்டலம் என்னும் தேஶத்தினுடைய, நடுவில் – மத்தியில், தூநில – பரிஶுத்த ஸ்தலமான, மெய் விரதத்தில் – ஸத்ய வ்ரதம் என்கிற க்ஷேத்ரத்தில், தோன்றி – ப்ரகாஶித்துக் கொண்டு, நின்ற – நிற்கிற, கொண்டல் – மேகம் போன்ற எம்பெருமானுடைய, அருள் – க்ருபையாகிற, குணமே – குணத்தையே, நாம், கூறுகின்றோம் – சொல்லுகிறோம், கூர்மதியீர் – ஸூக்ஷ்மமான புத்தியை உடையவர்களே, குறிப்பாக – ஸாவதானமாக, கொண்மினீரே – அங்கீகரியுங்கள், இதை எப்பொழுதும் அனுபவியுங்கள் என்றபடி. 2

தா – ம். ] ‘ எண்டிசையும் . . புண்டரிகத்தயன் ’ என்பதினால் ப்ரும்மாவினுடைய ஜ்ஞான ஶக்த்யாதிகளின் மேன்மையும், அதற்குக் காரணமான பிறப்பினால் வந்த ஏற்றமும் தெரிவிக்கப்படுகிறது. ‘ பெரிய வேள்வி ’ என்றது எல்லா யஜ்ஞங்களையும் விட உத்க்ருஷ்டமாகிய அஶ்வ மேத யாகம் என்றபடி. ‘ நறும் போக்கியத்தை ’ என்றது

‘ வபா வஸாஹோமகந்த வாஸிதாயாம வஸுவம் ’

என்கிறபடியே வபையாகிற ஹவிஸ்ஸை என்றபடி. ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் வெண்ணெயை அமுது செய்தபடியே ஆழ்வாருக்கு ஸேவை ஸாதித்தாப்போலே ஸ்வாமிக்கு ஸ்ரீ தேவப்பெருமாள் தாம் முன்பு ஹவிஸ்ஸை அமுது செய்தபடியே அர்ச்சா ரூபத்தில் ஸேவை ஸாதித்திருக்க வேண்டும் என்பது இத்தால் த்யோதிதமாகிறது. ‘உகந்துவந்து’ என்றது அதைத் தாம் அங்கீகரிப்பதற்காகவே அத்யுத்க்ருஷ்டமான பரமபதத்திலிருந்து துர்க்கந்தமயமாய் மிக்வும் ஹேயமான இந்த லோகத்தில் வந்து என்றபடி. ‘ தோன்றி நின்ற ’ என்றது ப்ரும்மாவிற்கு

அருள் செய்து அவர் இஷ்டம் பூர்த்தியானவாறே தம் தாமம் மேவிச் சென்று இனிது வீற்றிருக்கையன்றிக்கே

‘ ஸநாதந ஸந்நிஹிதாய ’

என்கிறபடியே நித்ய ஸாந்நித்யம் பண்ணிக்கொண்டிருக்கிற என்றபடி. ‘கோண்டல் ’ என்றது மேடு பள்ளம் என்கிற விபாகம் இல்லாமல் பெய்கிற மேகத்தைப் போல உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்கிற வித்யாஸம் பாராமல் க்ருபை செய்தருளுகிறபடியினாலே மேகம் போன்ற ஸ்வபாவத்தை உடைய பகவான் என்றபடி. கறுத்த நிறமுள்ள திருமேனியின் ஸாம்யத்தாலும் மேகம் போன்றவன் என்றாகவுமாம். ‘ அருள் குணமே ’ என்றது க்ருபையாகிற ஒரு குணத்தையே என்றபடி. மற்றைய எல்லாக் குணங்களிலும் ஆஶ்ரிதர்களுக்குத் தஞ்சமாயிருப்பது க்ருபையேயிறே. நம் பூர்வர்களும் அந்த க்ருபையிலேயிறே ஐகாந்திகளாய்ப் போந்து நின்றது.

‘ தோஷா பவேயுரேதே ’

என்கிறபடியே எம்பெருமானுடைய ஜ்ஞானம் ஶக்தி முதலியவைகள் எல்லாம் தயை இல்லாவிட்டால் தோஷங்களாகப் பர்யவஸிக்கும், அவைகளையும் குணங்களாக்கக் கூடிய தன்மை இந்த க்ருபைக்கே இருக்கிறபடியினாலே இதுவே குண ஶப்தத்திற்கு முக்யமான வாச்யம் என்றதாயிற்று. அன்றிக்கே அருள் – க்ருபையினுடைய, குணமே – ப்ரகாரத்தையே என்றர்த்தமாகவுமாம். அப்பொழுது ஸ்வாபாவிகத்வம், ஸர்வ விஷயத்வம் முதலியவைகள் விவக்ஷிதங்களாகும். ‘ கூர்மதியீர் ’ என்றது ஸாராஸார விவேகம் பண்ணக்கூடிய புத்தியை உடையவர்கள் என்றபடி. 2

‘ யதேகைக குணப்ராந்தே ஶ்ராந்தா நிகமவந்திந: ’

என்றிவர் தாமும்,

‘ நிஸ்ஸீமைகைக குணாவயவ்யா ஸதா ஸ்துதா நோ பரதோ திஶோஸ்தே’

என்று பெரிய முதலியாரும் அருளிச்செய்திருக்கிறபடியே பகவானுடைய ஸாமாந்ய குணங்களில் ஓரொன்றே அளவிடமுடியாமல் இருக்க அவைகளுள் ஸர்வோத்க்ருஷ்டமான க்ருபையாகிற மஹா குணத்தைக் கூறுகின்றோம் என்று ப்ரதிஜ்ஞை செய்தருளியது ஸாத்யமாகுமோ என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக



வம்மின் புலவீர் அருளாளப் பெருமாள் என்றும்
அருளாழி அம்மான் என்றும்
திருமாமகளைப் பெற்றுமென் நெஞ்சம் கோயில்
கொண்ட பேரருளாளர் என்றும்
வியப்பா விருதூதும்படி கரை புரண்ட கருணைக் கடலை
எவ்வண்ணம் பேசுவீர் ஈதென்னபாங்கே. 3

‘ யதா ஶ்ருதாவயி யதா மதி வால்மீகே: ஸத்வைவ தேவி ஸஹா ஸ்துவந: | வேதா ஸ்வதந்த்ரவத் வாஸ்து ஶஹாணவாந: கோ ஶஜ்ஜதாரணம் கருதாவலி யோ விஶேஷ: ‖ ’

என்று அருளிச்செய்யப்பட்டிருப்பதைத் திருவுள்ளம்பற்றி கவிகளான நீங்கள் எப்படிப் பகவத் குணத்தை வர்ணிக்க இழிந்தீர்களோ, அதைப் போல நானும் வர்ணிக்க உபக்ரமித்தேன் என்று அருளிச்செய்கிறார் —‘ வம்மின் ’ என்றாரம்பித்து. அதாவது பூர்ணமாய் வர்ணிக்க முடியாவிட்டாலும் ஶக்தி உள்ள வரையிலாவது அறிந்த வரையிலாவது அநுஸந்திக்கிறேன் என்று ஸமாதானம் சொல்லப்பட்டதாகிறது. இத்தாலும் க்ருபையின் உத்கர்ஷம் தெரிவிக்கப்பட்டதாகிறது.

ப – ரை. ] புலவீர் – வித்வான்களே, வம்மின் – வாருங்கள், அருளாளப் பெருமாள் – க்ருபையை உடையவரான ஸ்வாமி, என்றும், இது மேலே ‘ விருதூதும்படி ’ என்பதுடன் அந்வயிக்கிறது, அருள் ஆழி – க்ருபைக்கு ஸமுத்திரமாகிய, அம்மான் – ஸ்வாமி, என்றும், திருமா மகளைப் பெற்றும் – ஸ்ரீ என்கிற உத்தம ஸ்திரீயான லக்ஷ்மியைத் தனக்கு அஸாதாரணமான பார்யையாகக் கொண்டும், என் நெஞ்சம்– என்னுடைய மனதை, கோயில் – இருப்பிடமாக, கோண்ட – அங்கீகரித்த, பேரருளாளர் – அதிகமான க்ருபையை உடையவர், என்றும், வியப்பா – ஆஶ்சர்யமாக, விருதூதும்படி – பிருதுகளைச் சொல்லித் திருச்சின்னம் முதலிய வாத்யங்களை ஊதும்படி, கரை புரண்ட – கரையை அதிக்ரமித்த, கருணைக் கடலை – க்ருபையாகிற ஸமுத்திரத்தை, எவ்வண்ணம் – எந்த விதமாக, பேசுவீர் – நீங்கள் சொல்லுவீர்கள், ஈதென்ன பாங்கு – இந்தப் பரிபாகம் எப்படிப்பட்டது ? நமக்கெல்லாம் ஸாத்யமானதோ என்றபடி. 3

தா — ம். ] 'அருளாளப் பெருமாள்' என்பதினால் பகவானுடைய க்ருபை மிகவும் கொஞ்சமோ என்கிற ஶங்கை உதிக்கலாமாகையினாலே அதற்கு ஸமாதானமாக மேல் 'அருளாழி' என்றருளிச்செய்யப்பட்டிருக்கிறது. அது ப்ரயோஜன பர்யவஸானமான ப்ரகாரத்தைக் காட்டுகிறது 'திருமாமகளை' இத்யாதி. எல்லா நன்மைகளையும் தன் கடாக்ஷ லேஶத்தினால் கொடுத்தருளுகிற பெரிய பிராட்டியைத் தனக்கு ஸ்வாதீனமான பார்யையாகப் பெற்றும் அதி நீசனை 'என் நெஞ்சம் கோயில் கொண்ட' என்று அந்த க்ருபையின் ஸர்வ விஷயத்வம் நிரூபிக்கப்பட்டது. 'விருதூதும்படி' என்றது 'பேரணிந்துலகத்தவர் தொழுதேத்தும் பேரருளாளன் எம்பெருமானை' என்றும், 'அருளாழி அம்மானைக்கண்டக்கால்' என்றும், 'திருமாமகளைப்பெற்றுமென்னெஞ்சகம்கோயில்கொண்டபேரருளாளன்பெருமைபேசக்கற்றவன் காமரு சீர்க்கலியன்' என்றும் இப்படிகளில்ஆழ்வார்கள் எம்பெருமான் விஷயமாக அநுஸந்தித்துப் போந்த பிருதுகள் என்றபடி. இப்படி மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்கள் பேசும் பெருமையை அல்பஜ்ஞர்களான நாம் எவ்வண்ணம் பேசுவது ? என்று ஶங்கை காட்டப்பட்டதாகிறது. அவனுடைய குணங்களைப் பூர்ணமாக அநுஸந்திப்பது ஒருவருக்கும் ஸாத்யமல்லவாகையினால் அவரவர்கள் அறிந்த மட்டுமே தான் பேசவேண்டுமாகையினால் அப்படியே நானும் செய்கிறேன் என்கிற ஸமாதானம் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. 3

இப்படி அஶக்யமான கார்யத்தை ஆரம்பிப்பதை விட

'அநாரம்போ மநுஷ்யாணாம் ப்ரதமம் புத்திலக்ஷணம்'

என்கிறபடியே ஆரம்பிக்காமல் இருப்பதல்லவோ புத்திமான்களினால் செய்யத்தக்கது, ஆகையினால் பகவானுடைய க்ருபையின் ப்ரபாவத்தை வர்ணிக்காமல் இருப்பதே உசிதமானாலும், ஆசார்யர்களினால் அவன் திருவடிகளில் ந்யஸ்தபரனாக்கப்பட்ட நாம் புருஷார்த்தத்தைப்பற்றியும் ப்ரியாப்ரியங்கள் நேரும்பொழுது கர்ம லேஶம் நஶிக்கிறது என்கிற ஸந்தோஷத்தினாலே த்ருஷ்டார்த்த ப்ரவ்ருத்திகளிலும்ஸம்பந்தம் இல்லாமையினால் கேவலம் அநந்ய ப்ரயோஜனமான காலக்ஷேபத்திற்காக அறிந்த மட்டும் பகவத் குணங்களை வர்ணிக்க உபக்ரமிக்கிறோமாகையாலே ஔசித்யக் குறைவில்லை என்று ப்ரபந்தாரம்பத்தை ஸமர்த்தனம் செய்தருளுகிறார்— 'ஒன்றே' என்றாரம்பித்து.



ஒன்றே புகலென் றுணர்ந்தவர் காட்டத் திருவருளால்
அன்றே அடைக்கலம் கொண்ட நம்மத்திகிரித் திருமால்
இன்றே இசையிலிணையடி சேர்ப்பர் இனிப் பிறவோம்
நன்றே வருவதெல்லா நமக்குப் பரமொன்றிலதே. 4

ப — ரை. ] ஒன்றே — ஸ்ரீமந் நாராயணனாகிய ஒரு தத்வமே, புகல் — ப்ராப்யமும் உபாயமும், என்று, உணர்ந்தவர் — அறிந்தவர்களான நம் ஆசார்யர்கள், காட்ட — நம்மை அவன் திருவடிகளில் ரக்ஷ்ய வஸ்துவாக ஸமர்ப்பிக்க, அன்றிக்கே உணர்ந்தவர் — தத்வ ஹித புருஷார்த்த விஷயங்களை நன்றாக அறிந்த ஆசார்யர்கள், ஒன்றே புகல் என்று காட்ட — பகவான் ஒருவனுமே ப்ராப்யமும் ப்ராபகமும் என்று உபதேஶம் செய்ய, இந்தப் பக்ஷத்தில் பரந்யாஸம் பலிதம், திருவருளால் — தம்முடைய க்ருபையினால், அன்றே — அப்பொழுதே, அடைக்கலம் கொண்ட — ரக்ஷ்ய வஸ்துவாக நம்மை அங்கீகரித்த, நம் — நம்முடைய, அத்திகிரித் திருமால் — ஸ்ரீ ஹஸ்திகிரியில் வாஸம் செய்கிற பகவான், இசையில் — நாம் ஒப்புக் கொள்ளும் பக்ஷத்தில், இன்றே — இந்த தினத்திலேயே, அதாவது இப்பொழுதே, இணையடி — ஒன்றுக்கொன்றேஸத்ருஶங்களான திருவடிகளில், சேர்ப்பர் — சேர்த்துவிடுவர், இனி — இதற்குப் பிறகு, பிறவோம் — ஸம்ஸாரத்தில் பிறக்கக் கடவோமல்லோம், வருவதெல்லாம் — இதற்குப் பிறகு நேருகிற ஸுக துக்கங்களெல்லாம், நன்றே — நல்லதே, நமக்கு, ஒன்று — ஒரு விதமான, பரம் — பரமும், இலதே — இல்லை. 4

தா — ம். ] இந்தப் பாட்டிற்கு ஸ்வாமி தாமே ஸ்ரீ ரஹஸ்ய ரத்னாவளீ ஹ்ருதயத்தில் விஸ்தாரமாக வ்யாக்யானம்அருளிச்செய்திருக்கிறார். அதிலிருந்து இங்கு கொஞ்சம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது. 'ஒன்றேபுகல்' என்றது 'நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு' இத்யாதிகளிற்படியே பகவான் ஒருவனே ஸித்தோபாயம் என்றபடி. 'உணர்ந்தவர்' என்றது

'ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துஶ்ச ப்ரத்யகாத்மந: | ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்திவிரோதி ச || வதந்தி ஸகலா வேதா: ஸேதிஹாஸபுராணகா: |'

ஏன்கிறபடியே ஸர்வ ஶாஸ்திரங்களுக்கும் ஸாரமான ஸம்பந்த விஷயமாயும் அர்த்தபஞ்சக விஷயமுமான ஜ்ஞானத்தை உடையவர்களாய் அதை உபதேஶிக்க வல்லரான ஆசார்யர்கள் என்றபடி. ‘ உணர்ந்தவர் ஒன்றே புகல் என்று காட்ட ’ என்றந்வயம். புகலொன்றில்லாத நமக்கு ஸாத்யோபாயத்தாலே வஶீகரணீயமான ஸித்தோபாயத்தை வெளியிட என்றர்த்தம். இத்தால் உபாயானுஷ்டானமும் பலித்தபடி ஸூசிதம். அங்ஙனன்றிக்கே ‘ ஒன்றே புகல் என்று உணர்ந்தவர் ’ என்று ஆசார்யர்களை விஶேஷிக்கிறதாகவுமாம். அப்பொழுது ‘ காட்ட ’ என்பதற்கு அவர்கள் நம்மைப் பகவானுடைய திருவடிகளிலே அநந்ய ரக்ஷ்யத்வேந ஸமர்ப்பிக்க என்றர்த்தம். ‘ திருவருளால் ’ என்றது மிகவும் அதிகமான பாபங்களைச் செய்தவர்களையும் பொறுத்தருளக் கூடிய உத்க்ருஷ்டமான க்ருபையாலே என்றபடி. அன்றிக்கே எம்பெருமானை ஆஶ்ரித ரக்ஷணத்திலே அபிமுகனுக்கும் அகில ஜகந்மாதாவான பெரிய பிராட்டியாருடைய அபாய க்ருபையாலே என்றர்த்தமாகவுமாம். ‘ அன்றே அடைக்கலம்கொண்ட ’ என்பதற்கு உத்தர க்ஷணத்திலேயே நம்முடைய ரக்ஷண பரத்தை அங்கீகரித்துக் கொண்ட எனறர்த்தம். ‘ நம் அத்திகிரித் திருமால் ’ என்பதற்கு ஆஶ்ரிதர்களை அனுக்ரஹிப்பதற்கென்றே ஸ்ரீ ஹஸ்திகிரியில் வந்து பலப்ரதானோந்முகனாய் நிற்கும் ஸ்ரீ தேவப்பெருமாள் என்றர்த்தம். ‘ இன்றே இசையில் இணையடி சேர்ப்பர் ’ என்பதற்கு மோக்ஷத்தை அடையவேண்டும் என்று நாம் இச்சைப்படும் காலத்தில் அப்பொழுதே கொடுவுலகு காட்டாதே கொழுஞ்சோதி உயரத்துக் கூட்டரிய திருவடி கூட்டியருள்வர் என்றர்த்தம். ‘ இனிப் பிறவோம் ’ என்றது ஐஶ்வர்ய கைவல்யாதி புருஷார்த்தங்களைக் காம்பறக் கை விட்டு, பகவத் க்ஷேத்திர வாஸ கைங்கர்யாதி ஸங்கத்தாலே ‘ இங்கே திரிந்தேர்க்கு இழுக்குற்றென் ’ என்கிறபடியே த்வரையற்று இருக்குமளவிலும் சரணமாகும் தன தாளடைந்தார்க்கெல்லாம் மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான் இந்த ஶரீரம் விட்டபிறகு மற்றொரு ஜன்மம் வராதபடி ரக்ஷித்தருள்வன் என்றபடி. ‘ நன்றே வருவதெல்லாம் ’ என்றது இந்தஸம்ஸாரத்தில் இருக்கும் வரையில் உண்டாகும் ஹிதாஹிதங்கள் நம்மால் அங்கீகரிக்கப்பட்ட ப்ராரப்த கண்டத்தின் பலமாக உண்டாகிறபடியினாலே அவைகள் ப்ரிய ஹித விஶேஷங்கள் என்றபடி. ‘ நமக்குப் பரம் ஒன்றிலதே ’ என்றது ஆத்ம ரக்ஷணார்த்தமாகச் செய்ய



ஸர்வ ஜகதேகஶேஷியாய், ஸர்வ ஜகதந்தர்யாமியாய், ஸர்வ ஜகதாதாரனாய், ஸர்வ ஜகதேககாரணபூதனாய், ஸர்வ ஹேய ப்ரத்யநீக கல்யாணைகதானனாய், ஸகல காருண்ய ஸௌஶீல்ய வாத்ஸல்ய ஔதார்ய ஸௌந்தர்ய மஹோததியான ஶ்ரிய:பதி பரதேவதையன் ஒன்றும் தேவு முலகு முயிரும் மற்றும் யாதுமில்லா வன்று மஹதஹங்காராதி க்ரமத்தாலே ப்ரஹ்மாண்ட

வேண்டிய கார்யம் ஒன்றும் இல்லை என்றபடி. ‘ இனிப்பிறவோம் ’ என்றும், ‘ நமக்கு ’ என்றும் பன்மையாக ப்ரயோகித்திருப்பது ‘ பஶவ: மநுஷ்யா: பக்ஷீ வா யே ச வைஷ்ணவ ஸம்ஶ்ரயா: | தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம் பதம் |’ இத்யாதிகளிற்படியே தன்னுடைய அனுபந்திகளுடன் ரக்ஷிக்கப்படுவதைத் தெரிவிப்பதற்காக. ஆக இத்தால் ஒரு கார்யத்திற்காக நமக்குக் கர்த்தவ்யாம்ஶம் ஒன்றும் இல்லாமல் போனபோதிலும் இங்கிருந்த காலத்தில் போதுபோக்குக்காக அறிந்த வரையில் பகவத் குணானுபவம் பண்ணுகை உத்தர க்ருத்யத்திற்கு உசிதமாகையினால் அதில் ப்ரவ்ருத்தி செய்யப்படுகிறது என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. 4

ஸர்வ ஜகதேகஶேஷியாய் — எல்லா லோகங்களுக்கும் தானொருவனே ஶேஷியாய். அந்தர்யாமியாய் — உள்ளே இருந்து நியமிப்பவனாய். ஆதாரனாய் — தாங்குகிறவனாய். ஏக காரணபூதனாய் — முக்ய காரணமாய். ஹேயப்ரத்யநீக — கெட்ட குணங்களுக்கு விருத்தமான, கல்யாணைகதானனாய் — கல்யாண குணங்களுக்கு ஒரே இருப்பிடமாய். ‘ ஸகல ’ இத்யாதி—கரை இல்லாத காருண்யம் முதலிய குணங்களுக்கு ஸமுத்திரம் போன்றவரான. தேவும் — தேவ ஜாதியும், உலகும் — லோகங்களும், உயிரும் — ப்ராணிகளும், மற்றும் யாதும் — மற்ற எல்லா வஸ்துக்களும், ஒன்றும், இல்லா — இல்லாத, அன்று — அந்த ஸமயத்திலே. ‘ மஹத ’ இத்யாதி—மஹான், அதிலிருந்து அஹங்காரம் என்கிற வரிசையால், ப்ரஹ்மாண்டபர்யந்தமாக — ப்ரும்மாண்டம் வரையிலாக, ஸ்ருஷ்டி

பூர்ணமாக ஸ்ருஷ்டித்து, தேவு மெப்பொருளும் படைக்கப் பூவில் நான்முகனைப் படைத்து, திசைமுகன் கருவுள் வீற்றிருந்து, ப்ரஜாபதி பசுபதி ஸுரபதி ப்ரேதபதி ஜலபதி தனபதி முதலான க்ஷேத்ரஜ்ஞ வர்க்கத்தையும், சதுர்வித பூதஸர்காதிகள் என்றும் ஊர்த்வதிர்யகதராதிகள் என்றும் சொல்லுகிற போகஸ்தானங்களையும், இவற்றிலுட்பட்ட பூர்திவ்ய போக்ய போகோபகரண விசேஷங்களையும், விவித விசித்ர ஸந்நிவேசங்களாகப் பகுத்து, பண்டை நான்மறையும் வேள்வியும் கேள்விப் பதங்களும் பதங்களின் பொருளும் பி

---

த்து – உண்டாக்கி. தேவும் – தேவதைகளையும், எப்பொருளும் – மற்றெல்லா வஸ்துக்களையும், படைக்க – ஸ்ருஷ்டிப்பதற்காக, பூவில் – நாபீ கமலத்தில், நான் முகனை – சதுர் முகனான ப்ரும்மாவை. திசைமுகன் – நாலு திக்குக்களிலும் முகங்களையுடைய ப்ரும்மாவாகிற, கருவுள் – அதிஷ்டானத்தில், அதாவது தன்னாலே அதிஷ்டானம் செய்யப்படுகிற ப்ரும்மாவாகிற சரீரத்திலே, வீற்றிருந்து – அந்தராத்மாவாக இருந்து. ப்ரஜாபதி – ப்ரும்மா, பசுபதி – ருத்திரன், ஸுரபதி – இந்திரன், ப்ரேதபதி – யமன், ஜலபதி – வருணன், தனபதி – குபேரன், க்ஷேத்ரஜ்ஞவர்க்கத்தையும் – ஜீவாத்மாக்களின் ஸமூஹத்தையும், போகஸ்தானங்களையும் – ஸுகதுக்கங்களை அனுபவிக்கும் இடங்களையும், இவற்றிலுட்பட்ட – இவைகளுக்குள்ளடங்கின. பூ: – பூமியிலுண்டானதும், திவ்ய – ஆகாசத்திலுண்டானதுமான, போக்ய – அனுபவிக்கக் கூடிய வஸ்துக்கள், போகோபகரண – அந்த வஸ்துக்களை அனுபவிப்பதற்கு ஸாமக்ரிகள். விவித – அநேகம் விதங்களாய், விசித்ர – ஆஶ்சர்யகரங்களான, ஸந்நிவேசங்களாக – அமைப்புக்களை உடையவைகளாக. பண்டை – அநாதியான, நான் மறையும் – நாலு வேதங்களும், வேள்வியும் – அவைகளினால் ப்ரதிபாதிக்கப்படுகிற யாகங்களும், கேள்வி – கேட்கப்படுகிற, பதங்களும் – பதங்களை வகுக்கிற வ்யாகரண சாஸ்திரமும், பதங்களின் பொருளும் – அப்படிப்பட்ட பதங்களுக்கு அர்த்த



ண்டமாய் விரிந்த பிறங்கொளி யனலும் பெருகிய புனலொடு நிலனும் கொண்டல் மாருதமும் குரை கடலேழும் ஏழு மா மலைகளும் விசும்பும் அண்டமும் தானாகி நின்று, தனக்கு ஔரஸபுத்ரனுமாய் அவ்யவஹித சிஷ்யனுமான சதுர்தச புவன நிர்வாஹகனுக்கு வைத்தருள, இவ்வதிகாரம் பெற்ற ப்ரஹ்மா நாபிஜாதனாய்த் தோன்றச் செய்தே அபிஜாததமனாகையாலும், ஸர்வதோமுகமாக வேதப்ரவசனம் பண்ணுகையாலும், ஸரஸ்வதீ ஸஹசரிதயசாகையாலும

---

ங்களான ஜீவாத்மாக்களும், பிண்டமாய் – ஸமஷ்டி தசையில் பிரிக்க வொண்ணாமல் பிண்டம் போலே இருந்து, விரிந்த – கார்ய தசையில் அதிலிருந்து விஸ்தாரமாகி நின்ற, பிறங்கொளி அனலும் – பரவுகிற காந்தியையுடைய தேஜஸ் என்கிற தத்வமும், பெருகிய – பெருகாநிற்கிற, புனலோடு – ஜலத்துடன், நிலனும் – பூமியும், கொண்டல் – மேகமும், மாருதமும் – காற்றும், குரை – சப்தியா நிற்கிற, கடலேழும் – ஏழு ஸமுத்திரங்களும், ஏழு மா மலைகளும் – ஏழு பெரிய மலைகளும், விசும்பும் – ஆகாசமும், அண்டமும் – ப்ரும்மாண்டமும், தானாகி நின்று – தானேயாய் நின்று. காரணாவஸ்தையில் ஸூக்ஷ்மமான இவைகளை சரீரமாக உடைய தானே கார்யாவஸ்தையில் ஸ்தூலங்களான சேதனாசேதனங்களைத் தனக்கு சரீரமாக உடையவனாய் நின்றான் என்றதாயிற்று. ஔரஸபுத்ரனுமாய் – தன்னுடைய திருநாபியிலிருந்து உண்டான பிள்ளையாய், அவ்யவஹித சிஷ்யனுமான – நடுவில் வேறு ஒருவரும் இல்லாமல் நேரில், அதாவது ஸாக்ஷாத்தாக சிஷ்யனுமான. சதுர்தச புவன – பதினாலு லோகங்களுக்கும், நிர்வாஹகன் – ஸ்ருஷ்ட்யாதி கார்யங்களை நிர்வஹிக்கக் கூடியவன். நாபிஜாதனாய் – அபிஜாதனல்லாதவனாய், அதாவது திருநாபியில் உண்டானவனாய். அபிஜாததமன் – மிகவும் உயர்ந்த ஜாதியில் பிறந்தவன். ஸர்வதோமுகமாக – எல்லா முகங்களினாலும், அதாவது ஒரே காலத்தில் நாலு முகங்களாலும் நாலு வேதங்களையும் ப்ரவசனம் செய்கிற. 'ஸரஸ்வதீ' இத்யாதி – ஸர

யாலும், நாலு வர்ணங்களையும் ஸம்ரக்ஷித்த நாநாவித ஸாமர்த்யத்தாலும் நமக்கு நிகர் யாரென்று ஸுஜந விஷ்ணு வ்ருத்த மதங்களும் ஸ்வாதந்த்ர்யச் செருக்கும் ஏறி, கறந்த பாலுள் நெய்யே போல் இவற்றுள் எங்கும் கண்டு கொள் இறந்து நின்ற பெருமாயனை ஸ்வஸாமர்த்ய ஸாத்யமான ஸமாதியைக் கொண்டு ஸாக்ஷாத்கரிக்கலாம் என்று பார்த்து, இளப்பினை இயக்கம் நீக்கி இருந்து முன்னிமையைக் கூட்டி அளப்பிலைம் புலனடக்கி அன்ப

ஸ்வதிக்குப் பர்த்தா என்றபடி. ‘ ஸுஜந ’ இத்யாதி—ஆபிஜாத்யத்தினால் உண்டான கர்வம், படிப்பினால் உண்டான கர்வம், ஆசாரத்தினால் உண்டான கர்வம். ஸ்வாதந்த்ர்யச்செருக்கு—தன்னை ஸ்வதந்த்ரனாக நினைத்திருக்கையினாலுண்டான கர்வம். இதை இவர்தாமே ஸ்ரீபரமத பங்கத்தில் ‘ தாவிப் புவனங்கள் தாளிணை சூட்டிய தந்தையுந்திப்பூவில்பிறக்கினும் பூதங்கள் எல்லாம் புணர்த்திடினும் நாவில்பிரிவின்றி நாமங்கை வாழினும் ’ என்று அருளிச்செய்திருப்பது இங்கு அநுஸந்தேயம். கறந்த - கறக்கப்பட்ட, பாலுள் - பாலுக்குள்ளே, நெய்யே போல் - நெய் மாத்திரம் போல, அதாவது பால் கண்ணால் காணலாம் படி இருக்கச் செய்தே அதற்குள் வ்யாபித்திருக்கும் நெய் கண்ணுக்குத் தெரியாமலிருக்கிறாப் போலே பகவானும் இந்தச் சேதநாசேதன வஸ்துக்களில் வ்யாபித்திருந்த போதிலும் கண்ணுக்குப் புலப்படுகிறதில்லை என்றபடி. இவற்றுள் - கண்ணால் பார்க்கப்படுகிற வஸ்துக்களில் எங்கும் - எல்லாவற்றிலும், கண்டு கோள் இறந்து - கண்டு கொள்கை இல்லாமல், அதாவது நம்முடைய கண்களுக்குப் புலப்படாமல், நின்ற - இருக்கிற, பெருமாயனை - மிகவும் ஆஶ்சர்யமான ஸ்வபாவத்தையுடைய பகவானை, ஸ்வஸாமர்த்ய - தன்னுடைய ஸாமர்த்யத்தினால், ஸாத்யமான - செய்யப்படக்கூடியதான, ஸமாதி - யோகம், அதாவது தபஸ்ஸு. இளைப்பினை - க்லேசங்களை, இயக்கம் நீக்கி—ஸஞ்சாரத்தை நிவ்ருத்தி செய்து, இரண்டு செயப்படு பொருள் வருவது தமிழ் பாஷையின் ஸ்வபாவம், க்லேசங்களுடைய ஸஞ்சாரத்தை நிவ்ருத்தி செய்து என்றபடி, இருந்து - ஓர் ஆஸனத்தில் உட்கார்ந்துகொண்டு, முன் இமையைக் கூட்டி - மேல் இமையைக் கீழ் இமையுடன்



வர் கண்ணே வைத்துத் துளக்கமில் சிந்தை செய்து தோன்றலும் சுடர் விட்டாங்கே விளக்கினை விதியில் கண்டு மெய்ம்மையைக் காண வொருப்பட்ட வளவிலே பரஸ்வரூப ஸாக்ஷாத்கார விரோதியா யிருப்பதொரு மாளாத வல் வினை இவனை ஸமாதியில் நின்றும் மீட்டது. அப்பொழுது—

வம்பவிழ் போதமர் மாதருகந்த வம் மா நிதியைத்
தன் பலமே கொண்டு காணக் கருதிய தாமரையோன்
முன் பல குற்றத்து வல் வினை மொய்க்க முகிழ் மதியாய்
அம்புலி வேண்டிய பாலனைப் போலவழுதனனே. 5

சேர்த்து, அளப்பில் - அளவில்லாத, ஐம்புலன் - இந்திரியங்களையும், அடக்கி, அவர் கண்ணே - அந்த ஸர்வேஶ்வரன் இடத்திலேயே, அன்பு - பக்தியை, வைத்து, துளக்கமில் - சலனமில்லாத அதாவது இடைவிடாத, சிந்தை - த்யானத்தை, செய்து, ஆங்கே - அப்பொழுது, சுடர்விட்டு - தேஜஸ்ஸைப் பரப்பி, தோன்றலும் - தோன்றுகிற, விளக்கினை - ஜ்யோதி ஸ்வரூபனான ஸர்வேஶ்வரனை, விதியில் - ஶாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கும் வழியினால், கண்டு - ப்ரத்யக்ஷீகரித்து, மெய்ம்மையைக்காண - உண்மையான ஸ்வரூப ஸ்வபாவங்களை அறிவதற்காக, ஒருப்பட்ட வளவிலே - யத்தனித்த ஸமயத்தில். ‘ பர ’ இத்யாதி—பரமாத்மாவினுடைய ஸ்வரூபத்தின் ஸாக்ஷாத்காரத்திற்கு. மாளாத - நாஶத்தை அடையாத, வல் வினை - ப்ரபலமான கர்மம்,

இப்படி ப்ரும்மா துக்கிதனாய் நின்ற நிலையை த்ருஷ்டாந்தீத்துடனே நிரூபித்தருளுகிறார்—‘ வம்பவிழ் ’ என்றாரம்பித்து.

ப — ரை. ] வம்பு - வாஸனையுடன், அவிழ் - மலருகிற, அதாவது பரிமளத்துடன் விகஸிக்கிற, போது - தாமரஸ புஷ்பத்தில், அமர் - வஸித்துக்கொண்டிருக்கிற, மாதர் - லக்ஷ்மீ, உகந்த - ஸந்தோஷத்துடனே ஆஶ்ரயித்திருக்கிற, அம் மாநிதியை - அப்படிப்பட்ட மஹத்தான நிதியாகிய பகவானை, தன் - தன்னுடைய, பலமே கொண்டு - பலத்தையே காரணமாகக் கொண்டு, காணக் கருதிய - காணவேண்டும் என

ஆசைப்பட்ட, தாமரையோன் - ப்ரும்மா, முன் - முன் காலத்தில் செய்த, பல - அனேகம் விதங்களான, குற்றத்து - அபசாரங்களினாலுண்டான, வல் வினை - த்ருடமான கர்மங்கள், மொய்க்க - மொய்த்துக் கொண்டு நிற்க, முகிழ் - சுருங்கின, மதியாய் - புத்தியையுடையவனாய், அம்புலி வேண்டிய - சந்திரனைக் கையில் பிடித்துக் கொள்ளவேண்டுமென்றுஆசைப்பட்ட, பாலனைப்போல - குழந்தையைப் போல, அழுதனனே - அழுதான். 5

தா – ம். ] ‘ வம்பவிழ் ’ இத்யாதி — அப்படிப்பட்ட வாஸனை, மார்த்தவம், முதலிய குணங்கள் நிறைந்த தாமரைப் பூவில் வஸிக்கும் பெரிய பிராட்டியார் இந்த எம்பெருமானுடைய திருமார்பை ஆம்ரயித்தாள் என்பதினால் அந்தத் திருமேனியின் ஸௌகந்த்ய ஸௌகுமார்யாதிகள் ஸூசிப்பிக்கப்பட்டதாகின்றன. ‘ அம் மாநிதியை ’ என்றது ஶ்ருதியில் பொதுவாக ஹிரண்ய நிதி என்று ஓதப்படுகிற நிதியை இப்படி விசேஷித்து நிரூபித்தருளினர் என்றபடி. அதாவது

‘ ஹ்ருதி நியதரூபா ஸந்நியாநம் நியாநம் ’

என்று இவர் தாமே ஸ்ரீ த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியில் அருளிச்செய்திருக்கிறபடியே லக்ஷ்மியினுடைய ஸாந்நித்யம் மாறாத நிதி என்று விசேஷித்து நிரூபித்தருளினராயிற்று. ‘ தன் பலமே கோண்டு ’ என்பதினால் பகவானுடைய அனுக்ரஹம் வ்யாவர்த்திக்கப்படுகிறது. இத்தால்

‘ ஸக்த்யா ஸ்வ நந்யா ஶக்த்யா ஸஹதேவம் விலோக்யந |
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேந ’

இத்யாதிகளில் சொல்லப்பட்ட பகவத் ப்ரஸாதத்தைப்பெறாமல் கேவலம் தன்னுடைய ஜ்ஞான ஶக்த்யாதிகளினால் காண்பதற்கு எண்ணினமை த்யோதிதம். ‘ வல் வினை ’ யாவது இங்கு பகவானுடைய நிக்ரஹ ஸங்கல்பம். ‘ மொய்க்க ’ என்பதினால் ‘ நெய்க் குடத்தைப் பற்றி ஏறும் எறும்புகள் போல் ’ என்கிறபடியே கர்மங்கள் நிபிடமாயிருந்தமை சொல்லப்பட்டது. ‘பாலனைப்போல’ என்றது இது ஸாத்யம்,இது அஸாத்யம் என்கிற பகுத்தறிவு இல்லாத குழந்தையைப் போல என்றபடி. இங்கு ‘ நிதி ’ என்று நிர்த்தேஶித்திருப்பதினால் அதைப் பார்ப்பதற்கு வேண்டியதான அஞ்ஜனம் முதலிய ஸாதனங்கள் இல்லாதவர்களினால் அறிய முடியாது என்பது தெரிவிக்கப்படுகிறது. ‘ வம்பவிழ் ’ இத்யாதியால் போக்யத்வம் விவக்ஷிதம். 5



இப்படிக் கலங்கின ப்ருஹ்மா ‘ என்னே ! என்னே ! நமக்கு ஸர்வாந்தராத்மவிஷயமான ஸமாதி கை புகுராமைக்குக் காரணம் என் என்று விசாரித்து, நின்றவா நில்லாதே கபிசபலமான சக்ஷுஸ்ஸின் கஷாயவாகம் பிறவாமை என்று பார்த்து, மனோமாலிந்யஹேதுவான கர்மவிசேஷத்தைக் கழிக்கப்பெறாதே ( பாராதே ) இத்தனை நாளும் என்ன கார்யம் செய்தோம், இமையோர் வாழ் தனி முட்டைக் கோட்டையினை கூறு செய்வதாக ஏறவும் இழியவும் நெடுங்காலம் நி

இப்படிக் குழந்தையைப் போலே அழுத ப்ரும்மா தான் இதற்கு முன்பு பட்ட க்லேஶாதிகளை நினைத்துத் தானே தன்னைக் கர்ஹித்துக் கொண்ட ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்—‘இப்படி’ என்றாரம்பித்து. ‘ என்னே என்னே ’ என்றது ஆஶ்சர்ய த்யோதகம். ஸர்வாந்தராத்மவிஷயமான – எல்லா ஆத்மாக்களுக்கும் அந்தர்யாமியான பகவானைப்பற்றிய. இத்தால் எப்பொழுதும் ஸந்நிஹிதனாய் அந்தர்யாமியாய் இருக்கும் பகவானைப்பற்றிய த்யானம் ஸித்திக்காமலிருந்தது ஆஶ்சர்யம் என்று காரணம் காட்டப்பட்டதாகிறது. நின்றவா நில்லாதே - முன்க்ஷணத்தில் இருந்த மாதிரி மேல் க்ஷணத்தில் நிற்காமல், அதாவது க்ஷணம்தோறும் மாறிக்கொண்டிருக்கிற. கபிசபலமான – குரங்கைப்போல் சஞ்சலமான ஸ்வபாவத்தையுடைய. கஷாயவாகம் – பாபங்களினுடைய விநாஶம். மனோமாலிந்யஹேது – மனதில் அழுக்கு அடைந்திருப்பதற்குக் காரணம். கழிக்கப் பெறாதே - கழிவதாகிற பலத்தை அடையாதே. ‘ பாராதே ’ என்று பாடாந்தரம். அப்பொழுது போக்கடித்துக்கொள்ளுவதற்காக வேண்டிய ப்ரயத்தினங்களைச் செய்யாமல் என்றர்த்தம். இமையோர் வாழ் – தேவதைகள் வாழும்படியான, தனி – விலக்ஷணமான, லோகத்தில் கோட்டைகளுக்கு அனேகம் வாசல்களுண்டு, அண்டமாகிற கோட்டைக்கு அது இல்லாமையினாலே விலக்ஷணமானது என்னப்படுகிறது, முட்டை – அண்டமாகிற, கோட்டையினை - கோட்டையை, கூறு செய்வதாக - நம்முடைய ஸ்வாதீனமான பாகமாகச் செய்வதாக நினைத்து, ஏறவும் இழியவும் - அனேகம் தடவை ஏறியும் இறங்கியும்,

நிரயூகமாக காயக்லேஶம் பட்டோம்’ என்று நெஞ்சுருகிக் கண் பனித்து நெடு மூச்செறிந்து நிலத்தைப் பார்த்திருந்தான்.

அடங்காக் கரணங்கள் ஐந்துடன் ஆறுமடக்கிமுன்னம்
நெடுங்கால மிந்நிலமே நிலையாப் பூண்டு நீடுறைவான்
சடங்கால்பெரிய தவங்கள்செய்தேனென்னதன்மையிதெ
[ன்று
இடங்காத்திருந்த திசை முகன் தன்னை இகழ்ந்தனனே.

---

நிரயூகமாக — ப்ரயோஜனம் ஒன்றுமில்லாமல். காயக்லேஶம்பட்டோம் — ஶரீர துக்கத்தை அடைந்தோம். நெஞ்சுருகி - மனதுருகி கண்பனித்து - கண்களில் ஜலம் பெருகி, நெடுமூச்செறிந்து - பெருமூச்சுவிட்டுக் கொண்டு, நிலத்தைப் பார்த்திருந்தான் - கவிழ்தலை இட்டுக் கொண்டு இருந்தான்.

ப — ரை.] முன்னம் - இதற்கு முன்பே, நெடுங்காலம் - நீண்டகாலமாக, அடங்கா - அடங்காதவைகளான, ஐந்துடன் - ஐந்துகளாயும், ஆறும் - ஆறுகளாயும் இருக்கிற, கரணங்கள் - கர்ம ஜ்ஞானேந்திரியங்களை, அடக்கி - வசப்படுத்தி, இந்நிலமே - இந்தப் பூமியையே, நிலையாப் பூண்டு - எப்பொழுதும் இருப்பதாக அங்கீகரித்து, நீடு - பிறகு நீண்ட காலத்தில், உறைவான் - வஸிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டுக்கொண்டு, சடங்கால் - அங்கங்களினால், பெரிய - பெரியதான, தவங்கள் - தபஸ்ஸுக்களை, செய்தேன் - அநுஷ்டித்தேன், இது - இப்படிச் செய்தது, என்ன தன்மை - என்ன ஸ்வபாவம், என்று, திசை முகன் - ப்ரும்மா, இடம் காத்திருந்த - தன்னுடைய ஸ்தானத்தை வேறு ஒருவரும் ஆக்ரமிக்காதபடி காத்துக் கொண்டிருந்த, தன்னை, இகழ்ந்தனன் - நிந்தித்துக்கொண்டான். 6

தா — ம்.] ‘அடங்காக் கரணங்கள்’ என்றது
‘இந்த்ரியாணி ப்ரமாதீநி’
என்கிறபடியே மஹா பலிஷ்டங்களாய் இவனைப் பலாத்கரித்துத் தங்கள் விஷயங்களில் இழுத்துக் கொண்டு போகக் கூடிய ஸ்வபாவத்தையுடைய இந்திரியங்கள் என்றபடி. கர்மேந்திரியங்களை விட ஜ்ஞானேந்திரியங்களை வஶீகரிப்பது அதிக ப்ரயாஸ ஸாத்யமானது என்று தெரிவிப்பதற்காக ‘ஐந்துடன் ஆறும்’ என்று பிரித்து நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ‘நெடுங்காலம்’ என்றது இப்படி வ்யர்த்தமாகக் கழிந்த காலங்கள் அளவிடமுடியாதவைகள் என்றபடி. ‘பழுதே பல பகலும் போயின’ இத்யாதிகள் இங்கு அநுஸந்தேயங்கள்.



‘அஹோ ஸஹதீ யாதா நிஷ்பலா ஜந்மஸந்ததி:’
என்கிறபடியே நிஷ்பலமான கார்யங்களைச் செய்து எவ்வளவு காலம் வீணே போக்கப்பட்டது என்பது தெரிவிக்கப்படுகிறது. பகவதநுபவத்தாலே மஹாநந்தமாய் அடிக் கழஞ்சி பெற்று போக்கக் கடவதான காலமன்றோ இப்படிப் பழுதே போயிற்று என்று தாத்பர்யம். இப்படி
‘யுககோடி ஸஹஸ்ராணி’
இத்யாதிகளிற்படியே அநேகம் ஆயிரம் வருஷங்களன்றோ ப்ரயோஜநாந்தரங்களுக்காக வீணே செலவழிந்தன என்றதாயிற்று. ‘இந்நிலமே’ என்பதினால் அந்த ஸ்தானத்தில் அநுபவிக்கப்படும் அல்பத்வாதி தோஷங்கள் ஸூசிப்பிக்கப்படுகின்றன. அவைகளில்:— அல்பத்வமாவது மோக்ஷாநந்தத்தை விட மிகவும் ஸ்வல்பமாயிருக்கை. அஸ்திரத்வமாவது அழியக்கூடியதாயிருக்கை, அதாவது
‘ப்ரஹ்ம ஸ்வ நாஶோ காலாத் வ்யநாவதிஷ்டோ ஜநார்த்தந’
என்னும்படியாயிருக்கை. துக்க மூலத்வமாவது ஶ்ரமப்பட்டு ஸம்பாதிக்கக்கூடியதாயிருக்கை, அதாவது
‘க்ரியாவிஶேஷ பஹுளம்’
என்கிறபடியே பல தஶையில் வரும் ஸுகத்தை விட உபாய தஶையில் படும் கஷ்டம் அதிகமாயிருக்கும் என்றபடி. துக்க மிஶ்ரத்வமாவது பலத்தை அநுபவிக்கும் தஶையிலும் துக்கத்துடன் கலந்திருப்பது. ‘கலகத் தொழில் மது கைடபரால் படும் கட்டமெண்ணில்’ இத்யாதிகளிற்படியே ப்ரும்மத்வாதி பலங்களை அநுபவிக்கும் காலத்தில் மதுகைடபாதிகளினால் ப்ரஹரிக்கப்பட்டமை, அஸுரர்களினால் பீடிக்கப்பட்டமை முதலிய துக்கங்கள் உண்டாகின்றனவல்லவா என்றபடி. அப்ராப்தத்வமாவது பகவானுக்குத் தாஸபூதனான நம்முடைய ஸ்வரூபத்திற்கு உசிதமில்லாமலிருப்பது. ஸ்வாபாவிகாநந்

'யுககோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ: ।
புந: த்ரைலோக்ய தாத்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும ॥' என்கிறபடியே அதிஶயிதைஶ்வர்ய ஹேதுவா

---

விருத்தத்வமாவது ஸ்வபாவ ப்ராப்தமான பகவதனுபவமாகிற ஆநந்தத்திற்கு விரோதமாயிருக்கை. இவைகளை எல்லாம் நமக்கு ப்ரத்யக்ஷத்திலே தெரிவிக்கிறபடியினல் 'இந்நிலமே' என்று சுட்டிக் காட்டப்படுகிறது. 'பூண்டு' என்றது மற்றொருவரால் செய்யப்பட்டதொன்றன்றிக்கே தானே பண்ணின என்றபடி. அன்றிக்கே வேண்டாமென்கிற எண்ணம் பிறந்தவுடனே சடக்கென விடவொண்ணுதபடியிருக்கிற அதிகாரமாகிற விலங்கைப் பூட்டிக் கொண்டு என்றுமாகவுமாம். 'உறைவான்' என்றது உறைவதற்காக என்றபடி. இப்படி மிகவும் அல்பமான பலத்தை அனுபவிப்பதற்காக இவ்வளவு ஶ்ரமப்பட்டோமே என்றதாயிற்று. 'சடங்கால் பெரிய' என்றது அங்கங்கள் முதலியவற்றால் பெரியதான என்றபடி. 'தவங்கள்' என்கிற பஹு வசனம் பட்ட ஶ்ரமத்தின் ஆதிக்யத்தைத் தெரிவிக்கிறது. 'என்ன தன்மை' என்றது பலம் இது, இதற்காகப் படவேண்டிய ஶ்ரமம் இவ்வளவு, என்பதை விசாரிக்காமல் இந்த அல்ப பலத்தையே விஶேஷமாக நினைத்திருந்தமை என்ன மூட க்ருத்யமோ என்றபடி. 'இகழ்ந்தனனே' என்றது என்ன அஜ்ஞனே; என்ன மூடனே என்று தன்னையே தான் இகழ்ந்து கொண்டான் என்றபடி.

இப்படி நிர்வேதப்பட்ட ப்ரும்மா மேல் அந்தக் கர்ம விஶேஷத்தைக் கழிக்கும் உபாயம் எது என்று பார்த்து, அப்படிப்பட்ட தர்மானுஷ்டானத்திற்கு உசிதமல்லாத ஸ்தானங்களை விட்டுவிட்டு, அதற்கு உசிதமான ஸ்தானத்தில் வந்து புகுந்தான் என்கிறார்—'யுக' என்றாரம்பித்து. யுககோடி ஸஹஸ்ராணி — ஆயிரம் கோடி யுகங்கள், பத்மபூ: — ப்ரும்மாவானவர், விஷ்ணும் — பகவானை, ஆராத்ய — ஆராதனம் செய்து, புந: — மறுபடியும், த்ரைலோக்ய தாத்ருத்வம் — பூமி அந்தரிக்ஷம் ஸ்வர்க்கம் என்கிற மூன்று லோகங்களுக்கும் ஸ்ருஷ்டி கர்த்தாவாக இருப்பதை, ப்ராப்தவாந் — அடைந்தார், இதி — என்று, ஶுஶ்ரும — கேள்விப்படுகிறோம். 'அதிஶயித' இத்யாதி — மிகுந்த ஐஶ்வர்யத்தை அடைவதற்குக்



ன தபஸ்ஸைப் பண்ணி, அதிகாரம் என்பதோர் அளறிலே அழுந்தி, அநுதப்தனை ப்ரஹ்மா மதுஸூதந கடாக்ஷ விஶேஷத்தாலே மோக்ஷாபேக்ஷமான தபஸ்ஸுக்கு நிலமாவது ஏதென்று நிரூபித்து, பூமி ஒழிந்த லோகங்கள் பதிமூன்றும், பூமி தன்னில் ஜம்பூத்வீபம் ஒழிந்த மஹா த்வீபங்கள் ஆறும், ஜம்பூத்வீபம் தன்னில் பாரதவர்ஷமும் ஒழிந்த வர்ஷங்கள் எட்டும் போக பூமிகளாகையாலே மோக்ஷ விஶேஷாநுஷ்டாநத்துக்கு உசித க்ஷேத்ரங்கள் அன்றென்று உபேக்ஷித்து, ஸர்வ தக்ஷிணமாய் ஸர்வ கர்மாநுஷ்டாந யோக்யமுமான பாரத வர்ஷத்தில் வந்து புகுந்தான்.

---

காரணமான. அதிகாரம் — ப்ரும்மத்வமாகிற பதவி. அளறிலே — சேற்றிலே. அநுதப்தனை — பஶ்சாத்தாபத்தை அடைந்த. 'மதுஸூதந' இத்யாதி — மதுவை ஸம்ஹரித்தருளிய பகவானுடைய கடாக்ஷத்தினலே.

'ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந்மதுஸூதந: ।
ஸாத்விகஸ்ஸ து விஜ்ஞேய: ஸ வை மோக்ஷார்த்த சிந்தக: ॥'

என்றிவை முதலியவைகள் இங்கு அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டன. ரஜஸ்தமோ குணங்களின் அம்ஶமான மது கைடபர்களைக் கொன்றருளிய எம்பெருமானுடைய கடாக்ஷம் பெற்றவன் யாவன் அவனே மோக்ஷமாகிற பலத்தைப் பற்றிச் சிந்திப்பவனுவான் என்றதாயிற்று. தபஸ்ஸுக்குநிலம்ஏது — தபஸ் — செய்யவேண்டியதான இடமெது. போகபூமிகள் — கர்மங்களின் பலனை அனுபவிக்கும் இடங்கள். ஸர்வதக்ஷிணமாய் — எல்லாப் பூமிக்கும் தெற்கே இருப்பதாய். 'ஸர்வகர்ம' இத்யாதி — எல்லாக் கர்மங்களையும் அனுஷ்டிக்கத் தக்க இடமான.

விண்ணுலகில் வீற்றிருந்த மேன்மையாலும்
வேதங்கள் ஈரிரண்டும் விரித்தலாலும்
கண்ணனை நான் கருத்துறவே காண்பன் என்னக்
காணமல் விலக்கிய தன் வினையைக் காண
எண்ணிய நற் புவனங்கள் ஏழுமாறும்
இரு மூன்று தீவமும் எட்டிடமும் விட்டுப்
பண்ணிய நல் விரதமெல்லாம் பலிக்குமென்று
பாரதத்தைப் பங்கயத்தோன் படிந்திட்டானே. 7

---

இப்படிக் கீழ் நிரூபித்த அர்த்தத்தை ஒரு பாட்டாலே ஸங்க்ரஹித்தருளுகிறார்—‘விண்ணுலகில்’ என்றாரம்பித்து.

ப – ம்.] விண்ணுலகில் - ஆகாசமாகிற லோகத்தில், அதாவது எல்லா லோகங்களுக்கும் உயரத்தில் இருக்கும் ஸத்ய லோகத்தில், வீற்றிருந்த - தன்னுடைய மேன்மை தோன்றும்படியிருந்த, அதாவது தான் ஸர்வோத்க்ருஷ்டன் என்பது ப்ரகாசிக்கும்படியாக உட்கார்ந்திருந்த, மேன்மையாலும் - உத்கர்ஷத்தினாலும், ஈரிரண்டு - நான்கு, வேதங்கள் - வேதங்களையும், விரித்தலாலும் - ப்ரவசனம் செய்வதினாலும், நான் - இப்படிப்பட்ட ஜ்ஞான சக்த்யாதிகளையுடைய நான்
‘அஹம் [illegible]’
இத்யாதிகளில் சொல்லப்பட்ட என் பலத்தினாலேயே, கண்ணனை-பகவானை, கருத்துறவே - மனதில் ப்ரதிஷ்டிதனாயிருக்கும்படி, அதாவது இந்த ப்ரத்யக்ஷீகரித்ததினால் உண்டான ஸ்ம்ருதியானது நிலை நிற்கும்படியாக, காண்பன் - பார்ப்பேன், என்ன - என்று நினைத்து, காணமல் - பார்க்காமல் இருக்கும்படி, விலக்கிய - தடுத்துக்கொண்டிருக்கிற, தன் - தன்னுடையதான, அதாவது தன்னிடத்தில் ஸங்க்ரமித்த அயலாருடைய பாபமன்றிக்கே தன்னாலேயே அநுஷ்டிக்கப்பட்டதான, வினையை - கர்மத்தை, காண - காணுமல், இங்கு ப்ரும்மபத ப்ராப்திக்குக் காரணமான தபஸ்ஸை ‘வினை’ என்று நிரூபித்திருக்கிறது, எண்ணிய - புராணாதிகளில் எண்ணப்பட்ட, புவனங்கள் ஏழும் - அதல விதல நிதல தலாதல மஹாதல ஸுதல பாதாள என்னப்படும் கீழ் லோகங்கள் ஏழும், ஆறும் - புவ: ஸுவ: மஹ: ஜந: தப: ஸத்யம் என்னப்படும் மேல் லோகங்கள் ஆறும், அதாவது பூமியொழிய மற்றப் பதிமூன்று லோகங்களையும், இரு மூன்று - ஆறாகிய, தீவமும் - த்வீபங்களையும், அதாவது ப்லக்ஷ, சால்மலி, குச, க்ரௌஞ்ச, சாக, புஷ்கர, என்று சொல்லப்படுகிற ஜம்பூத்வீபம் தவிர மற்ற ஆறு த்வீபங்களையும், எட்டிடமும் - பாரத வர்ஷம் தவிர மற்றதான கிம்புருஷ, ஹரி, இலாவ்ருத, ரம்யக, ஹிரண்யக, குரு, பத்ராச்வ, கேதுமால, என்று சொல்லப்பட்ட எட்டு ஸ்தலங்களையும், விட்டு - போகபூமி என்று பரித்யஜித்து, பண்ணிய - அநுஷ்டிக்கப்பட்ட, நல் - நல்லதான, விரதம் - கர்மங்கள் எல்லாம், பலிக்கும் - பலத்தைக் கொடுக்கும், என்று - என்று நினைத்து, பங்கயத்தோன் - ப்ரும்மா, பாரதத்தை - பாரத வர்ஷத்தை, படிந்திட்டான் - அடைந்தான். 7



இப்படி ப்ரஹ்மா பாரத வர்ஷத்திலே வந்து புகுந்து தான் த்யாநமாக நினைத்திருந்ததொரு ஸத்யவ்ரத க்ஷேத்ரத்திலே ஒரு காலாலே நின்று ஊர்த்வபாஹுஜனும் உச்ச்வாஸ நிச்ச்வாஸங்களை அடக்கியும் ஒருவராலும் அநுஷ்டிக்க ஒண்ணாத தபஸ்ஸைப் பண்ணினவளவிலும் அந்தஃகரணம் அந்தராத்மப்ரத்யக்ஷகாரணமல்லாமையாலே ஸுதுஃகவிஷண்ணனாயிருக்க, அசரீரியாயிருப்பதொரு வாக்கு ஆகாசத்திலே கிளம்பி,

---

இப்படிப் பாரத வர்ஷத்தை அடைந்த ப்ரும்மா மற்ற க்ஷேத்திரங்களை விட்டு விட்டு ஸத்யவ்ரத க்ஷேத்திரத்தில் யாகம் பண்ணினதற்குக் காரணத்தை நிரூபித்தருளுகிறார் — ‘இப்படி’ என்றாரம்பித்து. ‘தான் த்யாநமாக’ இத்யாதி-தன்னுடைய மனதில் உத்க்ருஷ்டமானது என நினைத்த என்றபடி. ஊர்த்வபாஹுஜனும் — உயரத் தூக்கப்பட்ட கைகளை உடையவனும். ‘உச்ச்வாஸ’ இத்யாதி—உள்ளும் வெளியும் போகிற மூச்சுக் காற்றுகளை. இத்தால் ரேசக பூரக கும்பக ப்ராணாயாமாதிகளைச் செய்தபடி த்யோதிதம். அந்தஃகரணம்— மனது. ‘அந்தராத்ம’ இத்யாதி—எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியான பகவானை ப்ரத்யக்ஷீகரிப்பதற்குத் தகுந்ததாகவில்லையாகையினால். ஸுதுஃகவிஷண்ணனாய் – மிகவும் துக்கத்துடன் கூடினவனாய். அசரீரியாயிருப்பதொரு – சரீரமில்லாமல் இருப்பதொரு. ‘கிளம்பி’

வாராய் ப்ரஹ்மாவே! நீ வெறுக்க வேண்டுவதில்லை, உனக்கு த்யாநவிரோதியான து:க்கத்தைக் கழிக்கைக்கு ஒரு உபாயத்தை உபதேசிக்கிறேன், அதிகாரமாகிற ஸுகார்ணவத்திலே அழுந்தின உனக்கு ஆயிரம் அச்வமேதம் பண்ணினாலல்லது அந்த:கரண சுத்தி உண்டாகாது; கர்த்தவ்ய கௌரவத்துக்கும் கால விளம்பத்துக்கும் அஞ்சினையாகில் ஒரு அச்வமேதத்தாலே ஆயிரம் அச்வமேதத்தின் பலம் லபிக்கும்படி அநவதிக மாஹாத்ம்யமான ஸத்யவ்ரத க்ஷேத்ரத்திலே சென்று அதின் நடுவே ஸர்வ வ்யாபியான ஸர்வேச்வரன் நித்யமாக விசேஷ ஸாந்நித்யம் பண்ணியருளுகிற ஸ்ரீ ஹஸ்திகிரியை உத்தரவேதியாக்கி, அங்கே ஸர்வ யஜ்ஞங்களிலும் ப்ரதாநமான அச்வமேதத்தாலே ஸர்வ யஜ்ஞ போக்தாவான ஸர்வேச்வரனை ஆராதிப்பாய்' என்ன, அந்த அசரீரி வாக்யத்தைக் கேட்டு அதிஸந்துஷ்டனான ப்ரஹ்மா அப்பொழுதே ஸத்யவ்ரத க்ஷேத்ரத்திலே வந்து, விச்வகர்மாவை அழைத்து, 'நாம் இங்கே ஸர்வ பாப ப்ராயச்சித்தமாக வேதங்கள் விதித்த வைஷ்ணவமான அச்வமேதயாகத்தைப் பண்ணப் பாரா நின்றோம், விச்வகர்மாவே! விசாரதனான நீ ஸ்ரீ ஹஸ்திகிரியை சதுரச்ரமாக வகுத்து, அதையே உத்தர வேதியாக்கி, யாகசாலையைச் சமைத்து, நம்முடைய யஜ்ஞத்துக்கு வருகிற தேவ ஸுர யக்ஷ ராக்ஷஸ கின்னர கிம்புருஷ ஸித்த வித்யாதர கந்தர்வாதிகள் எல்லாம் நெருக்கமற இருக்கும்படி நீண்டு அகன்று உயர்ந்திருப்பதொரு ரமணீய ராஜதாநியைச் சடக்கெனச் சமைப்பாய்' என்று அதி ஸந்தோஷத்தோடு ஆஜ்ஞாபித்தான்.

எத்திசை நிலனுமெய்தி அருந்தவம் செய்த வந்நாள்
சத்தியவிரதம் செல்வா யென்றதோருரையின் சார்வால்
அத்திசை சென்றழைத்தங்கமரரில்லெடுப்பான் தன்னை
உத்தரவேதிசெய்என்றுரையணங்கிறை உரைத்தான். 8

---

என்றது மேலே 'என்ன' என்பதுடன் அந்வயிக்கிறது. த்யாநவிரோதியான – த்யானத்திற்குத் தடையான. 'அதிகார' இத்யாதி—ப்ரும்மத்வாதிகாரத்தினால் உண்டான அதிகமான ஆநந்தத்தை அனுபவிப்பதிலே. 'கர்த்தவ்ய' இத்யாதி—செய்ய வேண்டிய காரியம் பெரியதாயிருப்பதற்கும், அதை அனுஷ்டிப்பதற்கு வேண்டிய காலத்தினால் ஏற்படும் அவகாசத்திற்கும். அநவதிக மாஹாத்ம்யமான – எல்லையில்லாத மஹிமையையுடைய. விசேஷ ஸாந்நித்யம் பண்ணி – விசேஷமான ஆகாரத்தினால் ஸாந்நித்யம் செய்து. உத்தரவேதி – யஜ்ஞத்திற்கு அங்கமான வேதிகை. 'ஸர்வ' இத்யாதி—எல்லா யஜ்ஞங்களிலும் ஸமர்ப்பிக்கப்படும் ஹவிஸ்ஸை அமுது செய்பவனை. என்ன – என்று சொல்ல. 'ஸர்வபாப' இத்யாதி—எல்லாப் பாபங்களுக்கும் ப்ராயச்சித்தமாக,

வைஷ்ணவமான – விஷ்ணுவின் ஆராதன ரூபமான. பாரா நின்றோம் – யோசியா நின்றோம். விசாரதனான – ஸமர்த்தனான. சதுரச்ரமாக – நான்கு மூலைச் சவுக்கமாக. வகுத்து–செய்து. சமைத்து - அமைத்து. சமைப்பாய் – செய்வாய்.

இந்த அர்த்தங்களையே ஒரு பாட்டாலே ஸங்க்ரஹித்தருளுகிறார் —'எத்திசை' என்றாரம்பித்து.

ப – ம். ] உரை அணங்கு - வாக் தேவதையான ஸரஸ்வதிக்கு, இறை - நாயகனான ப்ரும்மா, எத்திசை – எல்லாத் திக்குக்களிலும் இருக்கிற, நிலனும் – பூமியையும், எய்தி – அடைந்து, அதாவது பாரத வர்ஷத்தில் ஏதோ ஒரு க்ஷேத்திர விசேஷத்திலே ப்ரும்மா தபஸ்ஸு செய்யா நின்றாலும், அங்கு தபஸ்ஸு பண்ண ஆரம்பிப்பதற்கு முன்பு மற்ற எல்லா க்ஷேத்திரங்களைப் பற்றி விசாரித்தே அவைகளைக் கைவிட்டபடியினால் இங்கு அப்படி அந்த எல்லாப் பூமிகளையும் மனதினால் யோசித்தமை அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டதாகிறது, அரும் தவம் – மற்றொருவராலும் அனுஷ்டிக்க முடியாததான

இப்படி ப்ரஹ்மா ஆஜ்ஞாபிக்க விஸ்வகர்மாவும் ஸர்வகுணோத்தரமான ஹஸ்திகிரியை உத்தரவேதியாக்கி இது ஸர்வேச்வரன் ஸந்நிதி பண்ணுகைக்கு இடமாம் என்று விசாரித்தான்.

உத்தம வமர்த்தல மமைத்த தொ
ரெழிற்றனு வுயர்த்த கணையால்

---

தபஸ்ஸை, செய்த – அனுஷ்டித்த, அந்நாள் – அந்த ஸமயத்தில், சத்திய விரதம் செல்வாய் – ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்குச் செல்லக்கடவாய், என்றது – என்று சொன்ன, ஓர் உரையின் – சரீரமில்லாமல் உண்டானபடியினாலே விலக்ஷணமாகிற அசரீரி வாக்யத்தினுடைய, சார்வால் – பலத்தினால், அதாவது அதில் உண்டான விச்வாஸத்தினால், அத்திசை சென்று – அந்தத் திக்கிலே போய், அங்கு – அந்த க்ஷேத்திரத்தில், அமரர் – தேவதைகளுக்கு, இல் எடுப்பான் தன்னை – வீடு முதலியவைகளைச் செய்யும் விச்வகர்மாவை, அழைத்து, – வரவழைத்து, உத்தர வேதி செய் – உத்தர வேதியை நிர்மாணம் செய், இது யாகங்களுக்கு அவச்யாபேக்ஷிதமான ஹவிர்த்தானம், ஸதஸ்ஸு, வாஸ ஸ்தானங்கள் முதலிய மற்ற எல்லாவற்றிற்கும் உபலக்ஷணமாகக்கடவது, என்று, உரைத்தான் – சொன்னான், அதாவது ஆஜ்ஞாபித்தான். 8

இப்படி ப்ருஹ்மாவினால் நியமிக்கப்பட்ட விச்வகர்மா தான் அவைகளைச் செய்யவேண்டிய இடம் பகவான் ஸாந்நித்யம் செய்தருளுவதற்கு உசிதமான இடமாகும் என்று நிச்சயித்தான் என்று நிரூபித்தருளுகிறார்—'இப்படி' என்றாரம்பித்து. 'ஸர்வ' இத்யாதி —எல்லாக் குணங்களினாலும் சிறந்ததான. ஸந்நிதி பண்ணுகைக்கு – நித்யமாக வஸிப்பதற்கு. விசாரித்தான் – அமைப்பையும் லக்ஷணங்களையும் பற்றி சில்ப சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் ப்ரகாரங்களை ஆலோசித்தான்.

இந்த க்ஷேத்திரமே ப்ருஹ்மாவிற்கு அபேக்ஷிதமான ஸர்வ பாப நிவ்ருத்தியைப்பண்ணிக்கொடுக்கும் என்று அனுஸந்தித்தபடியை அருளிச்செய்கிறார்—'உத்தம' என்றாரம்பித்து.



அத்திர(ற) வரக்கன்முடி பத்து மொரு
கொத்தென உதிர்த்த திறலோன்
மத்துறுமிகுத்த தயிர் மொய்த்த வெணெய்
வைத்ததுணும் அத்தனிடமாம்
அத்தி கிரி பத்தர் வினை தொத்தற
வறுக்கும் அணி அத் திகிரியே. 9

---

ப – ரை. ] உத்தம - உயர்ந்ததான, அமர்த்தலம் – யுத்தம் செய்யும் இடத்தில், அமைத்தது – அமைந்தது, அதாவது போதுமானதான, ஒரு – அத்விதீயமான, எழில் - ப்ரகாசத்தையுடைய, தனு - தனுஸ்ஸினால், உயர்த்த - உயரத்தள்ளப்பட்ட, கணையால் - பாணத்தினால், அத்திரவரக்கன் - அஸ்திர பலத்தினால் சிறந்த ராக்ஷஸனான ராவணனுடைய, முடி பத்தும் - தலைகள் பத்தையும், ஒரு கோத்தென - ஒரு குலை என்று சொல்லும்படி, உதிர்த்த - கீழே விழும்படி செய்த, திறலோன் - ஸாமர்த்யத்தையுடையவனும், மத்துறு - மத்தினால் உறுத்தப்பட்ட, மிகுத்த - அதிகமான, தயிர் - தயிரில், மொய்த்த - நுரைத்துக்கிளம்பினதாகிய, வேணெய் - வெண்ணெயை, வைத்தது - உறியில் வைக்கப்பட்டதை, உணும் - ஸாப்பிடும், அத்தன் - ஆப்தனாகிய பகவான், இடமாம் - வாஸம் செய்யும் இடமான, அத்திகிரி - ஸ்ரீ ஹஸ்திகிரியே, பத்தர் - பக்தர்களுடைய, வினை - கர்மத்தை, தோத்தற - ஸம்பந்தம் இல்லாமல், அறுக்கும் - போக்கடிக்கும், அத் திகிரி - அந்தச் சக்ரமாகிய திருவாழி, அணியே - அலங்காரமே. 9

தா – ம். ] 'உத்தம' என்றது
'ராம ராவணயோ யுத்தம் ராம ராவணயோரிவ'
என்கிறபடியே வேறு உபமானம் சொல்லமுடியாமல் ஸர்வோத்க்ருஷ்டமான என்றபடி. 'அமைத்தது' என்றது பர்யாப்தமானது, அதாவது சத்ருக்களை ஸம்ஹரிக்கப் போதுமான ஸாமர்த்தியத்தையுடைய என்றபடி. அன்றிக்கே 'உத்தம அமர்த்தலம்' என்றது ருத்திரனுக்கும் பகவானுக்கும் பலாபலப் பரீக்ஷைக்காக உண்டான யுத்த ஸ்தலத்தில் என்றாகவுமாம். அப்பொழுது 'அமைத்தது' என்பதற்கு ஸம பலமாக இருக்கும்படி ஸ்ருஷ்டிக்கப்பட்ட என்றர்த்தம். இப்படி இரண்டு தனுஸ்ஸுகள் உண்டாக்கப்பட்டிருந்தபோதிலும்

'ஜ்யாம்ஹிதம் தநுர்:'

என்கிறபடியே பகவானுடைய கர்ஜ்ஜனத்தினல் ருத்திரனுடைய வில் பிளந்துபோனமையினல் பகவானுடைய தனுஸ் ஒன்றே மிகுதியாயிருந்ததைத் திருவுள்ளம்பற்றி 'ஒரு' என்று அருளிச்செய்யப்பட்டது. 'எழில்' என்றது பகவானைத் தவிர மற்றொருவராலும் கையாளமுடியாத உத்கர்ஷத்தையுடைய என்றபடி. 'சார்ங்கம் என்னும்வில்லாண்டான் தன்னை' இத்யாதி இங்கனுஸந்தேயம். 'அத்திர அரக்கன்' என்றது தன்னுடைய தபோ பலத்தினல் அடையப்பட்ட அஸ்திர பலத்தையுடைய ராவணன் என்றபடி. 'அத்திற என்று பாடாந்தரம், அப்பொழுது அப்படிப்பட்ட ஸாமர்த்தியத்தையுடைய என்றர்த்தம். அதாவது ஸர்வேஸ்வரனை பகவானுடன் எதிர்த்து நின்று யுத்தம் செய்யும்படியான பராக்ரமத்தையுடையவன் என்றபடி. 'ஒருகோத்தேன' என்றது 'பானு நேர் சரத்தால் பனங்கனி போலப் பருமுடியுதிர வில் வளைத்தோன்' என்கிறபடியே ஒரு கொத்திலிருக்கும் பனங்காய்களைப் போலத் தனித் தனி பாண ப்ரயோகம் இல்லாமல் ஒரே பாணத்தினல் அடித்துத் தள்ளின என்றபடி. 'உதிர்த்த' என்பதினல் 'கிள்ளிக் களைந்தானை' என்கிறபடியே அநாயாஸேந செய்தமை சொல்லப்படுகிறது. 'வெண்ணெய் வைத்ததுணும் அத்தன்' என்றது ஆங்கொருநாள் ஆய்ப்பாடி சீரார் கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய் வாரார் வனமுலையாள் மத்தாரப் பற்றிக்கொண்டு ஏரார் இடை நோவ எத்தனையோர் போதுமாய் சீரார் தயிர் கடைந்து வெண்ணெய் திரண்டதனை வேரார் நுதல் மடவாள் வேறோர் கலத்திட்டு நாராருறியேற்றி நன்கமைய வைத்ததனை போரார் வேல் கண் மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம் ஓராதவன் போலுறங்கி அறிவுற்றுத் தாரார் தடம் தோள்கள் உள்ளளவும் கை நீட்டி ஆராத வெண்ணெயை விழுங்கினவனுகிய ஆப்தனை ஸ்ரீ க்ருஷ்ணன் என்றபடி. அதாவது ஆஸ்ரிதர்களிடத்திலுள்ள பரம வாத்ஸல்யத்தினல் அவர்களுடைய த்ரவ்யத்தைத் தனக்குத் தாரகமாக நினைத்தல்லவோ இவ்விதம் செய்தருளினன் என்றதாயிற்று. அன்றிக்கே

'த்ராண: ஸதாம் ஸ்ரீயத்ய ஸ்ரீயபதே ரக்ஷஸாம் நிதாநாய ஸம்ஸ்தாப ஹேதோ: |
ஸாதூநாம் ரக்ஷணார்த்தாய க்ருஷ்ண ந ச ஜாதவாந் ஸ்வேச்சயா ஸம்பவ ||'



இவ்வண்ணம் விஞ்சித்து உத்தரவேதியும் யஜ்ஞஸாலையும் படை வீடுமாக வகுத்து விஸ்வகர்மா காட்டக் கண்ட ப்ரஹ்மா தனக்கு ஸந்தோஷ விஷயமாகையாலே இந்நகரத்துக்கு காஞ்சீ என்று பேராக்கினன்.

அயோத்யா மதுரா மாயா காஸீ காஞ்சீ ஹ்யவந்திகா |
புரீ த்வாரவதீ சைவ ஸப்தைதா மோக்ஷதாயிகா: ||

என்கிறபடியே யதார்த்தவாதி என்றாகவுமாம். அதுவுமன்றிக்கே ஆஸ்ரிதர்களிடத்திலுள்ள நிரவதிக வாத்ஸல்யத்தினல் ஸர்வ ஸாஸ்திரார்த்த ஸங்க்ரஹமான ஸ்ரீ கீதையை உபதேஸித்தருளியவன் என்றாகவுமாம். 'இடமாம்' என்றது இந்த இரண்டு அவதாரங்களையும் செய்தருளிய பகவான் அர்ச்சா ரூபம் கொண்டு ஸேவை ஸாதிக்கும் க்ஷேத்திரமான என்றபடி. 'அத் திகிரி' என்றது 'அறமுயலாழிப் படை' இத்யாதிகளிற்படியே ஸர்வ பாபங்களையும் நிவ்ருத்திசெய்யக் கூடிய ஸ்வபாவத்தையுடைய ஸ்ரீ ஸுதர்ஸநாழ்வான் என்றபடி. 9

இப்படி விஸ்வகர்மாவினல் ஸ்ருஷ்டிக்கப்பட்ட யஜ்ஞசாலை முதலியவைகளைப் பார்த்து ப்ரும்மா ஸந்தோஷித்த ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்—'இவ்வண்ணம்' என்றாரம்பித்து. இவ் வண்ணம்—கீழ் நிரூபித்த ப்ரகாரமாக, அதாவது இந்த க்ஷேத்திரமே எல்லாப் பாபங்களையும் போக்கடிக்கும் என்று. யஜ்ஞஸாலையும்—யாகம் செய்யும் இடமும். படைவீடுமாக—வஸிக்கும் க்ருஹம் முதலியவைகளுமாக. இவை மற்ற எல்லாவற்றிற்கும் உபலக்ஷணம். 'காஞ்சீ' இத்யாதி—

'க இதி ப்ரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி: |
தஸ்மாத்காஞ்சீதி விக்யாதா புரீ புண்யவிவர்த்திநீ |'

(க என்று ப்ரும்மாவிற்குப் பெயர், அவரால் பகவான் இந்த க்ஷேத்திரத்தில் ஆராதிக்கப்பட்டமையினல் காஞ்சி என்று பெயராயிற்று) என்றிவை முதலியவை இங்கனுஸந்தேயங்கள்.

அயோத்யா — அயோத்யை, மதுரா — வடமதுரை, மாயா — மாயை, காஸீ — காசி, காஞ்சீ — காஞ்சி, அவந்திகா — அவந்தி, புரீ த்வாரவதீ சைவ — த்வாரகை என்கிற பட்டணம் ஆகிய,

திண் மணிகள் பொன்னுடனே சேர்தலாலும்
சிதையாத நூல் வழியில் சேர்த்தியாலும்
வண்மை யெழும் ஈரிரண்டு வண்ணத்தாலும்
வானவர்க்கும் வியப்பான வகுப்பினாலும்
உண்மையுடை வாசி யொளி யோசையாலும்
ஒரு காலுமழியாத வழகினாலும்
மண்மகளார்க்கு அலங்காரமென்ன மன்னு மதிள்
கச்சி நகர் கண்டு மகிழ்ந்திட்டானே.

ஸப்தைதா: – இவைகள் ஏழுகளும், மோக்ஷதாயிகா: – மோக்ஷத்தைக் கொடுப்பவைகள்.

இப்படி அந்தப் பட்டணத்திற்கு காஞ்சீ என்று பெயர் வைத்தது அது இந்தப் பூமியாகிற ஸ்திரீக்கு அரைநாண் மாலை போலிருப்பதினாலும் ஒக்கும் என்று ஒரு பாட்டாலே நிரூபித்தருளுகிறார்— ‘ திண் மணிகள் ’ என்றாரம்பித்து.

ப – ரை. ] திண் மணிகள் - த்ருடமான ரத்னங்கள், பொன்னுடனே - தங்கத்துடனே, சேர்தலாலும் - சேர்ந்திருப்பதினாலும், சிதையாத - சலிக்காத, நூல்வழியில் - ஸூத்திரம் போகும் வழியில், சேர்த்தியாலும் - சேர்க்கப்பட்டிருப்பதினாலும், வண்மை - அழகாலே, எழும் - வ்ருத்தி அடைந்திருக்கிற, ஈரிரண்டு - நான்காகிய, வண்ணத்தாலும் - வர்ணத்தினாலும், வானவர்க்கும் - தேவதைகளுக்கும் கூட, வியப்பான - ஆஸ்சர்யகரமான, வகுப்பினாலும் - பிரிவினாலும், உண்மையுடை - யதார்த்தத்தையுடைய, வாசி - நகரத்தில் வஸிக்கும் ஜனங்களின், ஒளி - ப்ரகாஶத்துடன் கூடிய, ஓசையாலும் - ஶப்தத்தாலும், ஒரு காலும் - ஒரு ஸமயத்திலும், அழியாத - நஶிக்காத, அழகினாலும், மண் மகளார்க்கு - பூமிப்பிராட்டிக்கு, அலங்காரமென்ன - ஒரு ஆபரணம் என்று சொல்லத்தக்கதான, மன்னு – த்ருடங்களாகிய, மதிள் – மதிள்களை உடைத்தான, கச்சி நகர் கண்டு – காஞ்சீபுரத்தைப் பார்த்து, மகிழ்ந்திட்டான் – ஸந்தோஷித்தான்.

தா – ம். ] இங்கு ‘ மண்மகளார்க்கு அலங்காரம் என்ன ’ என்று அருளிச்செய்யப்பட்டிருப்பதினால் இந்தப் பட்டணம் காஞ்சீ என்கிற ஆபரணத்திற்குத் துல்யமாயிருக்கிறது என்பது த்யோதிதம். எங்



இப்படி ஹம்ஸிக்கு அநுஜ்ஞாநமாக ஒரு காஞ்சியைச்சமைத்து, அங்கே அச்வமேத யாகத்திலே ருத்விக்குகளான(?) வஸிஷ்டாதி முதலான ப்ரஹ்மர்ஷிகளை ருத்விக்குக்களாக்கிக்கொண்டு, ‘ ஸரஸ்வதீ என்கிற ஆற்றிலே தவஸ்ஸு பண்ணுகிற என் ப்ரதான பத்நியான ஸரஸ்வதியை அழைத்துக் கொண்டு வருவாய் ’ என்று ஸ்ரீ வஸிஷ்ட பகவானை அநுஶாஸித்தான்.

ஙனே என்னில்:—‘ திண் மணிகள் ’ இத்யாதி—தங்கத்தில் சேர்த்து இழைத்திருப்பதினாலும். ‘ சிதையாத ’ இத்யாதி — நூல்களில் கோத்துக் கட்டப்பட்டிருக்கையாலும். நகரத்தின் பக்ஷத்தில் நூல் பிடித்து ஒழுங்கிட்டுப் பார்த்து அதே ப்ரகாரமாகக் கட்டப்பட்டிருக்கையாலும். ‘ஈரிரண்டுவண்ணத்தாலும்’ இத்யாதி —ஆபரணபக்ஷத்தில் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற பரபாகத்தினால் உஜ்வலமாய் நிற்கிற நாலு விதங்களான ரத்தினங்களாலும் என்றர்த்தம். நகர பக்ஷத்தில் தங்கள் தங்கள் கர்மாநுஷ்டானங்களில் த்ருப்தர்களாய் அத்தாலே அழகு பெற்று விளங்குகிற நான்கு ஜாதிகளினாலும். ‘ வானவர்க்கும் ’ இத்யாதி—அதிமானுஷமான போகங்களை அநுபவித்துக்கொண்டிருக்கும் தேவதைகள்கூட இந்தக்காஞ்சியின் அழகில் ஈடுபட்டு ஆஸ்சர்யப்படும்படியான வைசித்ர்யத்தை உடையதாகையாலும் என்றபடி. ‘உண்மை ’ இத்யாதி—க்ருத்ரிமமாகவன்றிக்கே உண்மையாகவே ஏற்பட்ட வித்யாஸத்தையுடைய ரத்தினங்களுடைய காந்தி ஓசை முதலியவைகளாலும் என்றபடி. நகர பக்ஷத்தில் அந்த நகரத்தில் வஸிக்கும் ஜனங்கள் ஸத்யமே சொல்லுகிறபடியினால் நகர வாஸிகளுடைய ப்ரகாஶிக்கும் ஶப்தத்தாலும் என்றபடி. ஆதலால் இந்நகரம் பூமிக்கு ஓர் ஆபரணமாகச் செய்யப்பட்டது போல் தோன்றுகிறது.

இனி ப்ருஹ்மா யஜ்ஞத்தை ஆரம்பித்து ரித்விக்குக்களை வரித்த ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்—‘ இப்படி ’ என்றாரம்பித்து. ஒரு காஞ்சியை – காஞ்சி என்கிற ஆபரணத்தை, அன்றிக்கே நகரத்தை. சமைத்து – ஸ்ருஷ்டித்து. ப்ரதான – முக்யமான, அதாவது முதலாவதான. அநுஶாஸித்தான்—ஆஜ்ஞாபித்தான்.

காமங்கள் பல கொண்ட வேதம் கொண்டு
கைதவமே செய்வார்க்குக் காணகில்லாப்
பூமங்கை கேள்வனை நான் கண்டு போற்றப்
புண்ணியத்தில் நிகரில்லா விரதம் பூண்டேன்
சாமங்கள் கழிவதன் முன் சடக்கெனப் போய்த்
தன்னாற்றில் தனியிருந்து தவம் செய்கின்ற
நாமங்கை வந்திட நீ அழைப்பாயென்று
நன் மகனை நான்முகன் தான் நவின்றிட்டானே.

---

இப்படி ப்ரும்மா வஸிஷ்டரை ஆஜ்ஞாபித்த ப்ரகாரத்தை ஒரு பாட்டாலே ஸங்க்ரஹித்தருளுகிறார் — 'காமங்கள்' என்றாரம்பித்து.

ப — ரை. ] பல — அனேகங்களான, காமங்கள் — காம்ய கர்மங்களை, கொண்ட — ப்ரதிபாத்யங்களாகக் கொண்ட, வேதம் — வேதத்தை, கொண்டு — ப்ரமாணமாக அங்கீகரித்து, கைதவமே — கபட கார்யத்தையே, செய்வார்க்கு — செய்கிறவர்களுக்கு, காணகில்லா — காண்பதற்கு அஶக்யமான, பூமங்கை கேள்வனை — புஷ்பத்தில் வஸிக்கும் லக்ஷ்மியின் நாயகனான பகவானை, நான் — கீழே நிரூபித்தபடி அலைந்து திரிந்து அதிலிருந்து நிவ்ருத்தி அடைந்திருக்கும் நான், கண்டு போற்ற — கண்ணால் கண்டு ஸ்தோத்திரம் செய்ய, புண்ணியத்தில் — புண்ணியங்களுக்குள், நிகரில்லா — ஸத்ருஶம் ஒன்றுமில்லாத, விரதம் — அஶ்வமேத யாகம் செய்யவேண்டும் என்கிற வ்ரதத்தை, பூண்டேன் — அங்கீகரித்தேன், சாமங்கள் கழிவதன் முன் — யாமங்கள் கழிவதற்கு முன்பே, அதாவது விளம்பிக்காமல், சடக்கென — சீக்கிரமாக, போய் — சென்று, தன்னாற்றில் — தன்னால் அபிமானிக்கப்பட்டுத் தன் பெயருடன் கூடியிருக்கிற ஆற்றங்கரையில், தனி இருந்து — தனியாக இருந்து, தவம் செய்கின்ற — தபஸ்ஸு செய்கிற, நாமங்கை — நாக்கிலே வஸிக்கும் மங்கையாகிற ஸரஸ்வதி, வந்திட — வரும்படியாக, நீ, அழைப்பாய் — அழைக்கக் கடவாய், என்று, நன் மகனை — நல்ல புத்திரனான வஸிஷ்டனை, நான் முகன் தான் — ப்ரும்மா, நவின்றிட்டான் — சொன்னான், அதாவது ஆஜ்ஞாபித்தான். 11

தா — ம். ] 'காமங்கள் பல கொண்ட' என்றது
'த்ரைகுண்ய விஷயா வேதா:'



இப்படி ப்ரஹ்மாவாலே நியுக்தனான ஸ்ரீ வஸிஷ்ட பகவான் ஸரஸ்வதி பக்கலிலே சென்று, ப்ரணிபா

---

என்கிறபடியே காம்ய பலங்களையே விஶேஷமாக ப்ரதிபாதிக்கிற வேதங்கள் என்றபடி.
'யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஶ்சித: ।
வேதவாதரதா: பார்த்த நாந்யதஸ்தீதி வாதிந: ॥'
என்கிறபடியே அந்த வேதங்களில் சொல்லப்படுகிற காம்ய பலங்களைத்தவிர வேறு நித்ய பலம் இல்லையென்று நினைத்திருக்குமவர்கள் என்றபடி. 'கைதவம்' இத்யாதி—ஆஶ்ரயண வேளையில் அவற்றைக் கைப்பற்றி, போக வேளையில் அவற்றைக் கை விடுகிறவர்களாகையால் கபட வ்ருத்தியையுடையவர்களுக்கு என்றபடி. 'காணகில்லா' என்றது
'வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே'
என்கிறபடியே த்யானத்திற்கு வேண்டிய நிஶ்சலமான புத்தி இல்லாமையினாலே பகவத் ஸாக்ஷாத்காரம் அவர்களுக்கு இல்லை என்றதாயிற்று. 'பூமங்கை கேள்வனை' என்றது ராவணாதிகளைப் போலே பிரித்துக் காண்கையன்றிக்கே 'திருக்கண்டேன் பொன் மேனி கண்டேன்', 'வடிவாய் நின் வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும்' இத்யாதிகளிற்படியே இருவரையும் ஒரு சேர்த்தியில் ஸேவித்து, அத்தால் வாழவேண்டுமென்று ஆசைப்பட்டேன் என்றதாயிற்று. 'போற்ற' என்பதற்கு ஸ்துதிக்கவும் நமஸ்கரிக்கவும் ஆராதனம் செய்யவும் என்றர்த்தம். 'தனி இருந்து' என்பதினால் ப்ரணய கலஹத்தினால் தனியே இருந்து தபஸ்ஸு செய்யச் சென்றமை த்யோதிதம். 'நீ அழைப்பாய்' என்றது நான் வ்ரதம் பூண்டமையினால் நேரில் சென்று அழைக்க முடியவில்லை, நீ நன் மகனாகையினாலே
'புத்ர: ஸகா' ... (best reading of Grantha: 'புத்ரா வை வஸு நாமாஸி')
இத்யாதிகளிற்படியே என்னோடு அபின்னனான நீ போய் அழைப்பாய் என்றபடி. அன்றிக்கே கோபத்துடன் இருக்கும் அவளை ஶமானப்படுத்தி அழைத்து வரக்கூடிய வாக் சாதுர்யத்தையுடைய நீ அழைத்து வரக்கடவாய் என்றபடியாகவுமாம். 11

இப்படி நியமிக்கப்பட்ட வஸிஷ்டர் ஸரஸ்வதியிடம் சென்று விண்ணப்பம் செய்த ப்ரகாரத்தையும் அவள் ஶாந்தி அடையாமல்

தாபிவாதநங்களைப் பண்ணி, ப்ரஹ்மாவின் யாகத்தை அறிவிக்க, ப்ரணயகலஹகலுஷிதையான ஸரஸ்வதி வாராதவளவில் ப்ரஹ்மா ஸாவித்ரீ முதலான பத்நிகளைக்கொண்டு யஜ்ஞம் பண்ணத் துடங்க, தைவஸத்காரக்ஷுபிதரான அஸுரர்கள் இந்த யஜ்ஞத்தைக் கலைக்க நினைத்துச் சென்று ஸரஸ்வதிக்கு அறிவிக்க, அவளும் அதிகுபித ஹ்ருதயையாய்க் கொண்டு தக்ஷிணா பதத்திலே போந்து வேறொரு மஹா நதியாய்ப் பெருகி ப்ரஹ்மாவினுடைய யஜ்ஞ ஸந்நிதியை அழிப்பதாக உபக்ரமித்தாள்.

அன்ன வடிவாளசையுமன்ன நடையாள்
உயரு மன்ன வரசேறி வருவாள்
அத்த னய னத்தநய னுத்திதனை
யத்திதென வுத்தி புரியாள்
நன்னடை விடா நடமிதென்ன நடவா
நடுவுள் நண்ணு குடகேறி இழிவாள்
நற்பதிக ளற்பதிகள் கற்புரள
வற்புத மருக் கதியினல்

அஸுரர்களினால் தூண்டப்பட்டு நதி ரூபமாய்ப் ப்ரவஹித்து யாகத்தை அழிப்பதற்காக அதிவேகமாக ப்ரவஹித்த ப்ரகாரத்தையும் நிரூபித்தருளுகிறார்—'இப்படி' என்றாரம்பித்து. நியுக்தனை — ஆஜ்ஞாபிக்கப்பட்டவனை. 'ப்ரணிபாத' இத்யாதி— நமஸ்காரம் அபிவாதனம் இவைகளைச் செய்து. 'ப்ரணய' இத்யாதி—ப்ரணய கலஹத்தினால் கலங்கின மனதையுடையவளான. பத்நிகளை — பார்யைகளை. தைவஸத்காரக்ஷுபிதரான — தேவதைகளுக்கு மர்யாதை செய்ததினால் கோபத்தையடைந்த. 'அறிவிக்க' என்றது இப்படி இதர மஹிஷிகளைக் கொண்டு யஜ்ஞம் நடக்கிறது என்பதைத் தெரிவிக்க என்றபடி. தக்ஷிணா பதத்திலே போந்து — அந்த ஸரஸ்வதி நதிக்குத் தெற்கு திக்கிலே சென்று. பெருகி — ப்ரவஹித்து.

இப்படி ப்ரவஹிக்க உபக்ரமித்த ஸரஸ்வதியின் கதி விஶேஷத்தை ஒரு பாட்டாலே ஸங்க்ரஹிக்கிறார்—'அன்ன வடிவாள்' என்றாரம்பித்து.

ப – ம்.] அன்ன வடிவாள் - ஹம்ஸம் போன்ற ஶரீரத்தையுடையவள், அதாவது ஹம்ஸம் போல் வெண்மை நிறத்தையுடையவள், அசையும் - மெதுவாக ஸஞ்சரிக்கும், அன்ன நடையாள் - ஹம்ஸம் போன்ற கதியையுடையவள், உயரும் - உயர்ந்ததான, அன்றிக்கே ஆகாசத்தில் உயர்ந்து பறக்கிற, அன்னவரசு - ஹம்ஸஶ்ரேஷ்டத்தில், ஏறி வருவாள், இத்தால் ஒரு அடி நடப்பதைப் பொறுக்காமல் ஹம்ஸவாஹனத்தில் ஏறி வருமவளுக்கு நதியாக ப்ரவஹிக்குங்காலத்தில் கலக்கமும் அதிவேகமாக வருவதும் கிரி கூடங்களில் ஏறியிழிகையும் எப்படி ஸம்பவித்ததோ என்கிற ஆஶ்சர்யம் த்யோதிதம், 'வருவாள்' என்பதினால் இதற்கு முன்பெல்லாம் கீழ் நிரூபிக்கப்பட்ட ஸ்வபாவத்தையுடையவளே இப்பொழுது அவற்றிற்கு முற்றிலும் மாறுபாடான மேலே நிரூபிக்கப்படும் ஸ்வபாவத்துடனே வருகிறாள் என்பது தெரிவிக்கப்படுகிறது, அத்தன் - ஆப்தனை, அயன் — ப்ரும்மாவினுடைய, இத்தால் இவளுடைய ப்ரணய கோபத்திற்குக் காரணம் ப்ரும்மாவினிடத்தில் இல்லையென்பது தெரிவிக்கப்பட்டதாகிறது, அத் தநயன் - அப்படிப்பட்ட புத்திரனை வஸிஷ்டருடைய, உத்திதனை — வார்த்தையை, அத்துஇது, என — இப்படியே ஆகட்டும் என்னும், உத்தி — பதில் வார்த்தையை, புரியாள் — கொடாதவளும், அதாவது அப்படியே ஆகட்டும் என்றுசொல்லாதவளுமான, 'அத் தநயன்' என்றது நல்லவார்த்தை சொல்லுவதில் மிகவும் சதுரனும், ப்ரும்மாவிற்குத் தன்னோடு அபின்னனை புத்திரனும் இருக்கிற என்றபடி, நன்னடை — நல்ல நடையை, அதாவது மிகவும் வேகமான நடையை, விடா — விடாததான, நடம்—நடனம், இது, என்ன - என்று சொல்லும்படி, அதாவது வேகமாய் ஓடுவதைக் காட்டும் ஒரு நாட்ய விஶேஷம் என்று சொல்லலாம்படி, ஆறுகளின் ப்ரவாஹத்தினுடைய வேகத்தை ஒரு நாட்யமாக வர்ணிப்பதும் அநேகம் ஸ்தலங்களில் காணப்பட்டிருக்கிறது, அதே மாதிரி இவர் தாமும் 'வாணியாற்றின் வண்ணிகை நன்னடம் கண்டு' என்று ஸ்ரீபரமதபங்கத்தில் அனுஸந்தித்தாரிறே, நடவா — நடந்துகொண்டிருக்கச் செய்தே, நடுவுள் — நடுவிலே, அதாவது தர்ஶநீயமான நாட்ய விஶேஷம் போலே அதிகம்பீரமாக ப்ரவஹித்துக்கொண்டிருக்கையிலே, நண்ணு — அருகில் இருக்கிற, குடகு — கற்கூட்டங்களின் மேல், ஏறி, இழிவாள் — இறங்குகிறவளுமான ஸரஸ்வதி, நற்பதிகள் — நல்ல ஸமமான ப்ரதேஶங்கள்,

கன்னடை விடா விடமிலுன்னதி சிரு
விகட மன்னு கிரி கூடமிடியக்
கட்ட விடை யிற்று விழ முற்றும்
விழி யுற்றடைய விட்டருகுற
அன்ன நய சீரய னிதென்னென
விழா வமரர் மன்னு பதியேறி மகிழ

அற்பதிகள் — அப்படியல்லாத மேடு பள்ளமான ஸ்தலங்கள், இவைகளிலே, கற்புரள — கற்கள் புரண்டு வர, ஸம பூமிகளிலும் மேடுபள்ளங்களிலும் கற்கள் புரண்டுவரும்படியாக, அற்புத—ஆஶ்சர்யகரமான, மருக்கதியினால் - வாயுவிற்கு ஸமமான வேகத்தினால், கல் நடை — கல்லிலே போவதை, விடா — விடாத, இடம் — ஸ்தலம், அதாவது கல்லின்மேல் நடப்பதைச் செய்யாத இடம், இல் — இல்லாத, இப்படி இரண்டு நகாரத்தை ப்ரயோகித்திருப்பது முழுவதும் கல்லின் மேலேயே சென்றமையைக் குறிக்கிறது, உன்னதி — உயர்ந்திருப்பதினால், சிரு — சிறுமை பெருத, அதாவது மற்ற மலைகளை விட உயரத்தில் சிறுமை பெருததான, அதாவது மிகவும் உயர்ந்ததான, விகட—விசாலமான, மன்னு — மிகவும் உறுதியான, கிரி கூடம் — மலைகளினுடைய சிகரங்கள், இடிய — இடியும்படி, கட்டவிடை — கஷ்டமான வ்ருஷபங்கள், அதாவது ஒருவராலும் அடக்க முடியாத வ்ருஷபங்கள், அன்றிக்கே வண்டி முதலியவைகளில் கட்டப்பட்ட வ்ருஷபங்கள், இற்று — ஸந்தி பந்தங்கள் இற்றுப்போய், விழ — கீழே விழ, முற்றும் — நாலு பக்கங்களிலும், விழியுற்று — விழித்தலை அடைந்து, அதாவது நாலா பக்கத்திலும் விழித்து விழித்துப் பார்த்து, அடைய விட்டு — எல்லாவற்றையும் விட்டுவிட்டு, அதாவது தாங்கள் உயிர் தப்பிப் பிழைத்தால்போதும் என்கிற எண்ணத்தினால் புத்திர தாராதிகளையும் தன தான்யாதிகளையும் பரித்யஜித்து, அருகுற — ப்ரும்மாவினுடைய ஸமீபத்தில் சென்று தங்களைக் காப்பாற்றும்படி ப்ரார்த்திக்க என்றதாகும், அன்றிக்கே தங்களுடைய வண்டிகளிலே கட்டப்பட்ட எருதுகள் கீழேவிழ, ஆவாரார் துணையென்று சுற்றிலும் பார்த்து, ஒருவரையும் காணாமல் அவைகளை எல்லாம் விட்டு விட்டு அவரவர்கள் தனித்தனியே நீஞ்சிக் கரைசேர என்றாகவுமாம், அன்னநய—ஹம்ஸத்தை அடையாளமாகவுடைய ந்யாயத்தைஉடையவனான அதாவது ப்ரணய குபிதையான பத்னியை ஶாந்தம் செய்வதற்காக



அச்சுதனணைத் தனுவிலத்திசை
வரத் தகைய வற்றணுகினள். 12

அன்று நயந்த வயமேத மா வேள்வி
பொன்ற வுரையணங்கு பூம்புனலாய்க் கன்றி வர
ஆதியய னுக்கருள் செய்தணையானன்
தாதை யரவணையான் தான். 13

புத்திரனை அனுப்பியும் வாராமையினாலே ஶாஸ்திரவிதியை அனுஸரித்து வேறு பத்னிகளைக்கொண்டு யஜ்ஞம் செய்தமையினால் ந்யாயமாக நடந்தவனான என்றபடி, சீர் - கல்யாண குணங்களையுடைய, அயன் - ப்ரும்மா, இது என் - இது என்ன ஆஶ்சர்யம், என - என்று விஸ்மிதனாய் நிற்க, விழாவமரர் - யஜ்ஞமாகிற மஹோத்ஸவத்திற்கு வந்த தேவதைகள், மன்னு - ஸ்திரமான, பதி - தங்கள் தங்கள் ஸ்தானங்களிலே, ஏறி - ஏறின பிறகு, மகிழ - இன்று செத்துப் பிழைத்தோம் என்று ஸந்தோஷப்பட, அத்திசை - ப்ரும்மா யஜ்ஞம் செய்கிற திக்கைக் குறித்து, வர - வந்துகொண்டிருக்கும் பொழுது. அச்சுதன் - ஆஶ்ரிதர்களை ஒரு பொழுதும் நழுவ விடாதவனாகையாலே ஸார்த்தகமாக அச்யுதன் என்கிற திருநாமத்தை உடைய பகவான், அணைத் தனுவில் - தனக்குத் திருப்பள்ளியாகிற ஆதிஶேஷனுடைய ஶரீரத்தில், அன்றிக்கே அணை போட்டாப் போலே நிஶ்சலமான திருமேனியுடனே என்றாகவுமாம், மேலேயும் ' திருவணை ' என்று அனுஸந்திக்கப்பட்டிருக்கிறதும், இந்த எம்பெருமானுக்கு வேகாஸேது என்கிற திருநாமத்தைச் சாற்றியிருப்பதும் அனுஸந்தேயம், தகைய-தடுக்க, வற்றணுகினள் - வற்றுதலை அடைந்தாள், அதாவது பூமிக்குள் அந்தர்தானம் செய்தாள், அன்றிக்கே வற்றி - தன்னுடைய வேகத்தை எல்லாம் அடக்கிக் கொண்டு தன்னுடைய கோபத்திற்காக வெட்கப்பட்டுக் கொண்டு, அணுகினள்-ஸமீபத்தில் வந்தாள் என்றாகவுமாம். 12

இப்படி ப்ரும்மாவை அனுக்ரஹித்தருளிய எம்பெருமானுடைய வாத்ஸல்யத்தை ப்ரகாஶம் செய்வதற்காகக் கீழ் நிரூபித்த அர்த்தத்தையே மற்றொரு பாட்டினால் அனுஸந்தித்தருளுகிறார்—' அன்று ' என்றாரம்பித்து.

ப - ம். ] அன்று-அப்பொழுது,அதாவது ஸரஸ்வதியானவள்வேகவதி நதியாக ப்ரவஹித்த காலத்தில், ' கையார் சக்கரமும் ' ஒரு நாளே

இப்படி ஸகலலோகைக ஸேது:வான ஸர்வேச்வரன் ஸரஸ்வதீ ப்ரவாஹ மத்யத்திலே அரவணையோடே கூட அணையாகக் கிடந்த வளவில் கண்ணும் மனமும் களிக்கக் கண்டு நின்ற த்ரைலோக்யவாஸிகளும் இவ்வண்ணம் பேசினார்கள்.

---

என்றாப் போலே அந்த நாளைக்கொண்டாடுகிறபடி, நயந்த-அனுஷ்டிக்கப்பட்ட, அயமேத - அச்வ மேதம் என்கிற, மா வேள்வி - பெரிய யஜ்ஞம், பொன்ற - நசிக்கும்படி, உரையணங்கு - ஸரஸ்வதியானவள், பூம்புனலாய் - அழகிய நதியாக, அதாவது கீழ் நிரூபித்த ப்ரகாரமாக தர்சநீயமான நடையுடன் கூடிய நதியாக, அன்றிக்கே ஆம்பல் நெய்தல் முதலிய புஷ்பங்களுடன் கூடிய நதியாக, கன்றி - கோபித்துக் கொண்டு, வர - ப்ரவஹிக்கும் பொழுது, ஆதி - ஸர்வ ஜகத்திற்கும் ஆதியாய் ஸ்ருஷ்டி கர்த்தாவான, அயனுக்கருள் செய்து - ப்ரும்மாவிற்கு க்ருபையைப் பண்ணி, தாதை - அந்த ப்ரும்மாவிற்குப் பிதாவாகிய, அரவணையான் - ஆதிசேஷனை சயனமாகவுடைய பகவான், இத்தால் ப்ரும்மாவிற்கு அனுக்ரஹம் செய்யும்படியான வாத்ஸல்யமும் அதற்குக் காரணமான ஸம்பந்த விசேஷமும் காட்டப்பட்டதாகிறது, தான் - தானே, அணையானான் - ஸேதுவாக ஆனான்,

'ஏஷாம் லோகாநாம் அஸம்பேதாய'

என்று எல்லா லோகங்களுக்கும் மர்யாதை ஏற்படுத்துவதற்காக அணையாய் நின்ற ஸர்வேச்வரன் தானே இப்பொழுது வேகவதிக்கு ஒரு அணையானான், அதாவது

'ஏஷ ஸேது:'

என்றதை இப்படி வ்யக்தமாகக் காட்டினான், ஆச்ரித ரக்ஷணத்திலே உண்டான த்வராதிசயத்தினால் மற்றொருவரை அனுப்பாமல் தானே நேரில் அணையாக ஆவிர்பவித்தான், 'மழுங்காத வைநுதிய' இத்யாதிகள் இங்கு அனுஸந்தேயங்கள். 13

'ஸகல' இத்யாதி—எல்லா லோகங்களுக்கும் ப்ரதானமான உபாயமாகிய. 'ஸரஸ்வதீ' இத்யாதி—ஸரஸ்வதியானவள் வேகவதி என்கிற நதி ரூபமாக ப்ரவஹிக்க அதின் நடுவிலே. கண்டுநின்ற-பார்த்துக்கொண்டிருந்த. த்ரைலோக்யவாஸிகளும் - மூன்று உலகங்களிலும் வஸிக்கும் ஜனங்களும்.



தரணியில் மன்னியயனார் தனித் தவம் காத்த பிரான்
கருணையெனும் கடலாடித் திருவணை கண்டதற் பின்
திரணரகெண்ணிய சித்திர குத்தன் தெரித்து வைத்த
சுருணையிலேறிய சூழ் வினை முற்றும் துறந்தனமே. 14

---

இப்படி வேகாஸேதுவான பகவானை அனுபவித்த ஜனங்கள் இந்த விலக்ஷணமான ஸேதுவை ஸேவித்து, கருணையாகிற கடலில் ஸ்நாநம் செய்பவர்களுக்கு ஸர்வபாபநிவ்ருத்தி உண்டாகும் என்று அனுஸந்தித்தார்கள் என்று அருளிச்செய்கிறார்—'தரணியில்' என்றாரம்பித்து. அந்த நள ஸேது தர்சனதிகள் ப்ரும்ம ஹத்யாதி சிற்சில பாபங்களுக்கே ப்ராயச்சித்தமாக சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டன. இந்த ஸேதுவோ

'ஸேது வாஜிமேத ரக்ஷயிஷ்யதி'

என்று சொன்ன பகவானுடையதாலே இப்படிப்பட்ட அதிசயித பலம் உண்டாகிறது என்பது ஒரு ஆச்சர்யமில்லையல்லவா.

ப—ம். | தரணியில் - பூமியில், மன்னி - ஸ்திரமாக இருந்து, அதாவது அப்படிப்பட்ட வேகவதியின் ப்ரவாஹத்தினாலும் அசக்க முடியாமல் ஒரு பெரிய குலாசலம் போலே ஸ்திரமாக இருந்து, அன்றிக்கே மேலே நிரூபிக்கப்படப்போகிறபடியே தான் வந்த கார்யம் ஆனவாறே தீர்த்தம் ப்ரஸாதித்துப் போகாமல் ஸ்திர ப்ரதிஷ்டிதனாய் அர்ச்சா ரூபம் கொண்டு ஸேவை ஸாதிக்கிற என்றதாகவுமாம், அயனார் - ப்ரும்மாவினுடைய, இவ்வளவு ஜனங்களும் பகவானை ஸேவித்து உஜ்ஜீவிக்கும்படி செய்த உபகாராதிசயம் தோற்ற பஹுவசனம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது, தனி - ஒப்பற்றதான, தவம் - தபஸ்ஸை, அதாவது அச்வமேத யாகத்தை, காத்த - ரக்ஷித்தவனான, பிரான் - உபகாரகனான எம்பெருமானுடைய, கருணையெனும் - க்ருபை என்று பெயர் பெற்ற, கடல் - ஸமுத்திரத்திலே, ஆடி - ஸ்நாநம் செய்து, திருவணை - வேகா ஸேதுவை, கண்டதற்பின் - கண்ணாலே ஸேவித்த பிறகு, இத்தால் பகவானுடைய ஸேவை கிடைப்பதற்கு அவனுடைய க்ருபையே காரணம் என்பது த்யோதிதம், ஸமுத்திரத்தில் நீராடி நள ஸேதுவைக் காண்பாரைக் காட்டிலும் கருணையாகிற ஸமுத்திரத்தில் ஸ்நாநம் செய்து, வேகா ஸேதுவை ஸேவிப்பவர்களுக்குள்ள விசேஷத்தை நிரூபித்தருளுகிறார்—'திரள்' என்றாரம்

இப்படி வேகவதியாய் வந்த ஸரஸ்வதியினுடைய க்ரோத வேகமடங்கும்படி வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தன் கடாக்ஷிக்கக் கலக்க மற்று வந்த ஸரஸ்வதியையும் கூட்டிக் கொண்டு ப்ரஹ்மா அஶ்வமேதயாகத்தை நடத்த வபா ஹோமம் ஆரப்தமான வளவிலே ஆயிரம் கோடி ஸூர்யர்கள் உதித்தாப்போலே உத்தர வேதி மத்யத்திலே ஒரு மஹா தேஜஸ்ஸு தோன்றிற்று.

சுகலேசமெண்ணிய சூழ் வினை தீர்க்கத் துணிந்தயனார்
அகலாத அன்புடன் கொண்டவயமேத வேதியின்மேல்
புகலோங்குபொன்மலையென்றதோர்புண்ணியகோடியுடன்
பகலோன் பகல் விளக்காகப் பரம் சுடர் தோன்றியதே.

---

பித்து, இத்தால் ‘ஆடு காண் போவதே’ என்கிற லௌகிகோக்தியும் ஸூசிப்பிக்கப்பட்டதாகிறது, நரகு - நரகங்களினுடைய, திரள் - ஸமூஹத்தை, எண்ணிய - கணக்கிட்டுப் பார்க்கிற, அதாவது இன்ன பாபத்தைச் செய்தவனுக்கு இத்தனை காலம் இந்த நரகத்தில் வருஷம் என்றிப்படிக் கணக்கிட்டு வைக்கிற, சித்திரகுத்தன் - சித்திர குப்தன் என்கிற பெயருடைய யம லோகக் கணக்கன், தெரித்து வைத்த - எழுதி வைத்த, சுருணையிலே - கணக்குச் சுருணையில், ஏறிய - குறிக்கப்பட்ட, சூழ் வினை - ‘நெய்க்குடத்தைப் பற்றி ஏறும் எறும்புகள் போல் நிரந்து’ என்றும், ‘கொடு வினைத் தூறு’ என்றும் சொல்லுகிறபடியே நம்மைச் சூழ்ந்து கொண்டிருக்கும் பாபங்களை, முற்றும் - முழுமையும், துறந்தனம் - நிவ்ருத்தி செய்தோம், ‘நமன் கூறு செய்து கொண்டிறந்த குற்றம் எண்ண வல்லனே’ என்றதாயிற்று. 14

வெஃகாவில் - திருவெஃகா என்னும் க்ஷேத்திரத்தில், துயிலமர்ந்த - நித்திரையில் ஸுப்ரதிஷ்டிதனாயிருக்கிற, வேந்தன் - ராஜாவாகிய ஸர்வேஶ்வரன். கலக்கமற்று - ப்ரணய கோபம் நீங்கி.

[ப — ம். ] சுகலேசம் - ஸுகத்தின் அல்ப பாகத்தை, எண்ணிய - ப்ராப்யமாக நினைத்த, அதாவது துக்கமே மிகுந்ததாய் அத்யல்பமாகிய ஸுகத்தையுடைய ப்ராப்யாபாஸங்களையே ப்ராப்யமாக எண்ணினதினால் உண்டான, சூழ் வினை - தானாகச் சூழ்த்துக்கொண்ட, அ



சைத்ரே மாஸி ஸிதே பக்ஷே சதுர்தஶ்யாம் திதௌ முநே।
ஶோபநே ஹஸ்தநக்ஷத்ரே ரவிவார ஸமந்விதே॥

---

தாவது தன்னைச் சூழ்ந்துகொள்ளும்படி தானே செய்த பாபங்களை, தீர்க்க - நிவர்த்திப்பித்துக் கொள்ள, துணிந்து-நிஶ்சயத்தைப்பண்ணின, அயனார் - ப்ரும்மா, அன்றிக்கே ‘சுகலேசம் எண்ணிய அயனார் சூழ் வினை தீர்க்கத் துணிந்து’ என்றந்வயமாகவுமாம், அகலாத அன்புடன் - ஒரு நாளும் விட்டுப் பிரியாத பக்தியுடன், அதாவது ப்ரயோஜனாந்தரங்களைப் பெற்று அகன்று போகாமே உபாய பல தசைகள் இரண்டிலும் அவனுடைய திருவடிகளே உபஜீவ்யங்கள் எனகிற ஒரு நாளும் மாறாத பக்தியுடன், கொண்ட - அங்கீகரித்ததான, அதாவது அனுஷ்டிக்கப்பட்ட, அயமேத வேதியின் மேல் - அஶ்வமேத யாகத்தில் உத்தர வேதியின் மேல், புகலோங்கு - காந்தி உயரப் பரவா நிற்கிற, பொன்மலை என்றது - தூரத்தில் நின்று பார்த்தவர்களினால் ஸ்வர்ணமலை என்று சொல்லப்பட்ட, ஓர் - விலக்ஷணமான, புண்ணிய கோடியுடன்-புண்யகோடி என்னப்படும் விமானத்துடன், ‘பொன்மலையன்னது’ என்று பாடாந்தரம், அப்பொழுது தங்க மலைக்கு ஸத்ருஶமாயிருக்கிற, என்று அர்த்தம், பகலோன் - ஸூர்யன், பகல்விளக்காக - மத்யாஹ்னத்தில் ஏற்றி வைக்கப்பட்ட தீபத்திற்கு ஸத்ருஶனாகும்படியாக, அதாவது இந்த விமானத்தின் தேஜஸ்ஸினால் ப்ரகாஶிக்கும் ஸூர்யனும் பகலில் விளக்குப் போலே ப்ரகாஶமில்லாமல் போகும்படியாக,

‘ஸ்வதேஜஸி விரதௌஜஸ்வதே விஶ்ரேஷ்டே ஸ்ராவேத
ஸஞ்சஸம்பவ ஸஹஸ்ரபாநோ:’

என்று ஸ்ரீவரதராஜ பஞ்சாஶத்தில் அருளிச்செய்யப்பட்டதிறே, பரம் சுடர் - எல்லாவற்றிற்கும் மேலான தேஜஸ்ஸு, தோன்றியது - ஆவிர்ப்பவித்தது. 15

முநே – ஓ! ரிஷியே, சைத்ரே மாஸி – சித்திரை மாதத்தில், சதுர்தஶ்யாம் திதௌ – சதுர்த்தஶி திதியில், ரவிவார ஸமந்விதே – ஞாயிற்றுக்கிழமையுடன் கூடிய, ஶோபநே – மங்களகரமான, ஹஸ்தநக்ஷத்ரே – ஹஸ்த நக்ஷத்திரத்தில், ப்ராதஸ்ஸவநகாலிகே – ப்ராதஸ் ஸவன காலத்தில் செய்யப்பட்ட, வ

வபா ஹொமெ ப்ரவ்ருத்தெ து ப்ராதஸ்ஸவந காலிகெ |
ப்ரஹ்மணஸ்த்வுத்தரவெத்யாஃ ப்ராதுராஸீஜ் ஜநார்த்தநஃ ||

இப்படி பெருமாள் ஆவிர்ப்பவித்தருளின படிக்கு நித்யஸூரிகள் முகத்தாலே காளங்கள் வலம்புரி கலந்தெங்கும் ஆர்த்தன.

பெருமையுடை யத்திகிரிப் பெருமாள் வந்தார்
பேராத வருள் பொழியும் பெருமாள் வந்தார்
அரு மறையினுச்சி தனில் நின்றார் வந்தார்
அங்கமுட னவை யாகும் பெரியோர் வந்தார்

---

வபா ஹொமெ – வபா ஹோமமானது, ப்ரவ்ருத்தெ து – நடந்து கொண்டிருக்கும்பொழுது, ப்ரஹ்மணஃ – ப்ரும்மாவினுடைய, உத்தர வெத்யாஃ – உத்தர வேதியின் நடுவில், ஜநார்த்தநஃ – பகவான், ப்ராதுராஸீத் – ஆவிர்ப்பவித்தார்.

ஆவிர்ப்பவித்தருளினபடிக்கு - அந்தப்ராதுர்பாவத்தினுடைய ஏற்றத்திற்குத் தகுந்தபடி. நித்யஸூரிகள் முகத்தாலே – நித்ய ஸூரிகளுடைய வாயினால் ஊதப்பட்ட. எங்கும் - எல்லாத் திக்குக்களிலும், கலந்து - வ்யாபித்து, ஆர்த்தன - ஶப்தித்ததுகள்.

இப்படிக் காஹளம் முதலிய வாத்யங்களுடைய த்வனியின் ப்ரகாரங்களை இரண்டு பாட்டுக்களினால் ஸங்க்ரஹித்தருளுகிறார் —‘ பெருமையுடை ’ என்றாரம்பித்து.

ப – ம். ] பெருமையுடை - பெருமையுடையவரான, அதாவது ஸர்வோத்க்ருஷ்டர் என்கிற ஏற்றத்தையுடைய, அத்திகிரி - ஸ்ரீ ஹஸ்திகிரியில் வஸிக்கிற, பெருமாள், வந்தார் – ஆவிர்ப்பவித்தார், பேராத – ஒரு நாளும் நிவ்ருத்தி அடையாத, அருள் - க்ருபையை, பொழியும் - வர்ஷிக்குமவரான, பெருமாள் வந்தார், அரு - அறிவதற்கு அஶக்யமான, மறையின் - வேதத்தினுடைய, உச்சி தனில் - ஶிரஸ்ஸில், அதாவது உபநிஷத்துக்களில், நின்றார் - ப்ரதிபாத்யதயா நிற்பவர், வந்தார், அங்கமுடன் - ஆறு அங்கங்களுடன், அவையாகும் - அந்த நாலு வேதங்களுமாக ஆகுமவரான, அதாவது வேத வேதாந்த நிர்வாஹகரான, பெரியோர் - உத்க்ருஷ்டரானவர், வந்தார், திரு - லக்ஷ்மியான



திரு வுரையாய்த் தாம் பொருளாய் நிற்பார் வந்தார்
திருவருளால் செழும் கலைகள் தந்தார் வந்தார்
மருவிலர்க்கு மயக்குரைக்கும் மாயோன் வந்தார்
வானேற வழி தந்தார் வந்தார் தாமே. 16

அத்திகிரி யருளாளப் பெருமாள் வந்தார்
ஆனை பரி தேரின் மேலழகர் வந்தார்
கச்சி தனில் கண் கொடுக்கும் பெருமாள் வந்தார்
கருத வரம் தரும் தெய்வப் பெருமாள் வந்தார்
முத்தி மழை பொழியும் முகில் வண்ணர் வந்தார்
மூலமென ஓலமிட வல்லார் வந்தார்
உத்தர வேதிக்குள்ளே உதித்தார் வந்தார்
உம்பர் தொழும் கழலுடையார் வந்தார் தாமே.

---

வள், உரையாய் - ஶப்தமாய், தாம், பொருளாய் - அவற்றிற்கு அர்த்தமாய், நிற்பார் வந்தார், அதாவது

‘ ஶப்தப்ரஹ்ம விஷ்ணுஸ்ரீயம் வாணீ ’

என்றது இங்கு அநுஸந்தேயம், திருவருளால் - க்ருபையினாலே, செழும் - ஶ்லாக்யங்களான, கலைகள் - வித்யைகளை, தந்தார் - கொடுத்தருளியவர், வந்தார், கீழ் வேதங்களுக்கு நிர்வாஹகன் என்று சொல்லப்பட்டதினாலும், இங்கு அவைகளினால ப்ரதிபாதிக்கப்படும் வித்யையைக் கொடுத்தவர் என்று சொல்லப்படுகிறபடியினாலும் புனருக்தியில்லையென்று அறியத்தக்கது, மருவிலர்க்கு - விஶ்வாஸம் இல்லாதவர்களுக்கு, மயக்குரைக்கும் - வ்யாமோஹ ஶாஸ்திரங்களை உபதேஶிப்பவரான, மாயோன் - வஞ்சகரான பகவான், வந்தார், வான் - பரம பதத்தை, ஏற - ஏறுவதற்கு, வழி - மார்க்கத்தை, தந்தார் - கொடுத்தவர், தாமே - ஸ்வயமாகவே, வந்தார். 16

ப – ரை. ] அத்திகிரி - ஸ்ரீ ஹஸ்தி கிரியில் எழுந்தருளியிருக்கிற, அருளாளப் பெருமாள் - க்ருபையையே தனக்கு ஸ்வரூப நிரூபகமாகவுடைய பகவான், வந்தார், ஆனை, பரி - குதிரை, தேரின் மேல் - தேர் இந்த வாஹனங்களின் மேல், அழகர் - விஶேஷ ஸௌந்தர்யத்தையு

டையவர், வந்தார், கச்சி தனில் - காஞ்சீபுரத்தில், கண் கோடுக்கும் - த்ருஷ்டியைக் கொடுக்கும், பெருமாள் வந்தார், கருத - மனதினால் நினைக்கவே, வரம் தரும் - வரத்தைக் கொடுக்கும், தெய்வப் பெருமாள் - தேவஶ்ரேஷ்டர், வந்தார், முத்தி - மோக்ஷமாகிற, மழை - மழையை, பொழியும் - வர்ஷிக்கிற, முகில் வண்ணர் - மேகத்தின் ஸ்வபாவம் போன்ற ஸ்வபாவத்தை உடையவர், வந்தார், மூலமென - ஜகத்திற்கு மூல காரணம் என்று சொல்லி, ஓலமிட - ஸ்ரீ கஜேந்திராழ்வான் கூப்பிட, வல்லார் - அதை ரக்ஷிக்க ஶக்தியுடையவர், வந்தார், உத்தரவேதிக்குள்ளே - ப்ரும்மாவினால் ஏற்படுத்தப்பட்ட உத்தரவேதிக்குள்ளே, உதித்தார் - ஆவிர்ப்பவித்தவர், வந்தார், உம்பர் - தேவதைகள், தொழும் - ஸேவிக்கும், கழலுடையார் - திருவடிகளையுடையவர், தாமே வந்தார்.

தா — ம். ] ‘ அழகர் ’ என்றது ஸ்வயமே ஸர்வாங்க ஸுந்தரனை பகவான் குதிரை நம்பிரான் முதலிய வாஹனங்களில் ஸேவை ஸாதிக்கும் பொழுது அவனுடைய ஸௌந்தர்யம் வாசாமகோசரமாயிருக்கும் என்றபடி. இந்த விஶேஷத்தை இவர் தாமே

‘ தாரம விஹமராஜ ஸந்நாதொவிகாஷிஷ ஈயிக உயிகஉந்ாஉாதூ ஶோஹாஂ உயாநஂ ’

என்று ஸ்ரீ வரத ராஜ பஞ்சாஶத்தில் அனுஸந்தித்தாரிறே. ‘ கண் ’ என்றது கேவலம் த்ருஷ்டியாய், கண் இழந்த குருடர்களுக்கு அதைக் கொடுத்தருளுமவர் என்றபடி. அன்றிக்கே ஜ்ஞான சக்ஷுஸ்ஸைச் சொல்லி ரஹஸ்யார்த்த ஜ்ஞானத்தைக் கொடுக்குமவர் என்றதாகவுமாம். ‘ முகில் வண்ணர் ’ என்றது மேடு பள்ளம் என்கிற வித்யாஸம் இல்லாமல் மேகம் ஜலத்தை வர்ஷிக்கிறுப் போலே

‘ ஈநாஞொவித விஶெஷாஶெஷ ஞொக ஶரண ’

என்கிறபடியே தன்னை ஆஶ்ரயித்தவர்களில் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கிற வித்யாஸம் பாராமல் எல்லாருக்கும் ஒக்க அருள் புரிந்து பரம பலத்தைக் கொடுக்குமவன் என்றபடி. ‘ வல்லார் ’ என்றது இதர தேவதைகள் எல்லோரும்

‘ நாஹஂ நாஹஂ ந வாஹஂ ’

இத்யாதிகளிற்படியே அவரவர்கள் ஓடி ஒளிய பகவான் ஒருவனே ஓடி வந்து காப்பாற்றினன் என்றபடி. இந்தக் கஜேந்திர ஸம்ரக்ஷணத்தையிறே இதர தேவதைகளை ஆஶ்ரயிப்பதில் ப்ரயோஜனம் இல்லை என்பதற்கும் பகவான் ஒருவனே ஆஶ்ரயணீயன் என்பதற்கும் அத்தாக்ஷியாக ‘ துப்புடையாரை அடைவதெல்லாம் சோர்விடத்துத் துணையாவரென்றே ஒப்பிலேன் ஆகிலும் நின்னடைந்தேன் ஆனைக்கு நீ அருள் செய்தமையால் ’ என்று பெரியாழ்வார் நிரூபித்தருளியது. 17



இப்படி ஆவிர்பவித்தருளின பெருமாளுடைய உஹா தெஜஸ்ஸிலே ஸம்ரமேறி ஓடின ப்ருஹ்மாவும் தெவர்களும் ஜஷிகளும் வருந்திக் குறித்துப் பார்த்து அத்தெஜொ உண்டலத்துக்குள்ளே வர்ணகொடி விமாநத்தையும் அவ்விமாந மத்யத்திலே ஹவிஹஹஉ்வரான பெருமாள் காஞ்சி வஷியாயிருப்பதொரு காஉஜெவஂ போலே நின்றருளின படியையும் கண்டு ஹஷவிஷயவாரவஶராய்க் கொண்டு இங்ஙனே பேசினர்கள்.

திருபரிதிசைந்த மகுடமுமெழின்மதி திகழ்ந்தவதனமும்
இருவகையிலங்கு குழல்களிலெதிர்பொரவுகந்த மகரமும்

ஸம்ரமேறி — ப்ரமம் உண்டாகி, ஓடின - முழுமையும் வ்யாபரித்த, அன்றிக்கே இது ஏதோ என்று ப்ரமித்துத் தூர ஓடின என்றுமாகவுமாம். வருந்தி - ஶ்ரமப்பட்டு. குறித்துப் பார்த்து - ஸாவதானத்துடன் பார்த்து. ஹவிஹஹஉவரான — ஹவிஸ்ஸை உள்ளே வைத்துக்கொண்டிருப்பதை ஸூசிப்பிக்கிற முகத்தையுடையவரான. காஞ்சிவஷியாய் — காந்தியாகிற மழையைப் பெய்கிற, காஜெவஂ போல — கறுத்த மேகம் போலே. ஹஷவிஷயவாரவஶராய் — ஸந்தோஷம் ஆஶ்சர்யம் இவைகளுக்கு வசப்பட்டவராய்.

இப்படி ஆவிர்ப்பவித்தருளிய பெருமாளுடைய திருவவயவஶோபையைத் தனித் தனியே ப்ரும்மாதிகள் பேசி அனுபவித்தபடியை நிரூபித்தருளுகிறார் —‘ திருபரிதிசைந்த ’ என்றாரம்பித்து.

ப — ம். ] திரு - காந்தியுடன் கூடிய, அதாவது தன்னுடைய எல்லாக் கிரணங்களுடனும் ப்ரகாஶிக்கிற, பரிதி-ஸூர்யனுடன், இசைந்த — ஸத்ருஶமான, மகுடமும் — கிரீடமும், அதாவது கிரீடத்துடனும், இப்படியே மேலும் சொல்லிக்கொள்ளவும், எழில் — ப்ரகாஶித்துக்

ஒரு தகவுயர்ந்ததிருமகளொளி மறுவில் மன்னுமகலமும்
உருவருவுமிழ்ந்த வுதரமு முலகடைய நின்ற கழல்களும்
மருவினிடையோங்கு புனலென மலைகுனிய நின்ற மலை
யென
மருளற விளங்கு மொளியென மலரயனுகந்த பயனென
அருவிலுறைகின்ற வுயிரென வடியவருகந்த வமுதென
அருமறைகளொன்றியடிதொழவருள்வரதர் நின்றபெரு
மையே. 18

கொண்டிருக்கிற, மதி – சந்திரன் போல, திகழ்ந்த – ப்ரகாஶிக்கிற, வதனமும் – திருமுக மண்டலமும், இரு வகை – இரண்டு பிரிவாக, இலங்கு – ப்ரகாஶிக்கிற, அதாவது இரண்டு கபோலங்களிலும் இரண்டு பிரிவுகளாகத் தொங்குகிற, குழல்களில் – திவ்ய அளகங்களில், எதிர் பொர – எதிரே போக, அதாவது பொர என்பது இங்கு குறுகிக் கிடக்கிறது, உகந்த – ப்ரீதியுடன் ப்ரவ்ருத்தித்திருக்கிற, மகரமும் – மகரங்களும், அதாவது குண்டலங்களிலிழைத்த மகரங்கள் ஊர்த்வமுகங்களாக இருப்பதைத் திருவுள்ளம் பற்றி இப்படி அருளிச்செய்யப்பட்டது, ஒரு – விலக்ஷணமான, அதாவது பகவானைப் போல் நிக்ரஹஸங்கல்பத்துடன் சேராத ஏற்றம் பெற்ற, தகவு – க்ருபையினால், உயர்ந்த – மேற்பட்டவளான, திருமகள் – பெரிய பிராட்டியார், ஒளி – காந்தியையுடைய, மறுவில் – ஸ்ரீவத்ஸம் என்கிற சின்னத்துடன், மன்னும் - ஸ்திரமாக வஸிக்கும் இடமான, அகலமும் - திருமார்பும், உரு - ரூபத்துடன் கூடிய வஸ்துக்களையும், அரு - ரூபமில்லாத வஸ்துக்களையும், அதாவது சேதநாசேதன வஸ்துக்களையும், உமிழ்ந்த - ஸ்ருஷ்டி காலத்தில் வெளி நாடு காண உமிழ்ந்த, உதரமும் - திருவுதரமும், உலகு - லோகங்கள், அடைய - ஆஶ்ரயிக்கும்படி, நின்ற - எதிரே வந்து ஸுலபமாய் நின்றவையான, கழல்களும் - திருவடிகளும், அன்றிக்கே உலகடைய – எல்லா லோகங்களிலும், நின்ற – வ்யாபித்து நின்ற, அதாவது த்ரிவிக்ரமாவதாரத்தில் வ்யாபித்து நின்ற திருவடிகளும், அரு – அறிய முடியாத, மறைகள்–வேதங்கள், ஒன்றி – ஒன்றுசேர்ந்து அதாவது ஒரே தாத்பர்யத்தையுடையவைகளாய், அடி – திருவடிகளை, தொழ – ஸேவிக்கும்படியாக, இங்கு



இவ்வண்ணம் ஶுஶ்ருஷை ஸஹத்தாலும் ஹக்தி ஸூக, ஷத்தாலும் ஸூஶிதராய்க் கொண்டு தொழுவதெழுவதாய் இவருக்கு நாம் அடியோமாகப் பெறுவதே

‘ ஸவெ வெஹா யலெஸ்ருகம் ஹவஞி ’

இத்யாதிகள் அநுஸந்தேயங்கள், அருள் வரதர் – க்ருபையினால் வரத்தைக் கொடுக்கும் எம்பெருமான், நின்ற பெருமை - புண்ணியகோடி விமானத்துடன் ஸ்ரீ ஹஸ்தி கிரியில் ஆவிர்ப்பவித்து நின்றருளிய மாஹாத்ம்யம், மருவின் - ஜலம் இல்லாத பாலை வனத்தின், இடை – நடுவில், ஓங்கு - தானே கிளம்பா நிற்கிற, புனலென - ஜலம் போலவும், அதாவது ஸகல ஹேய குணங்களுக்கும் இருப்பிடமான இந்த விபூதியில் அகிலஹேய ப்ரத்யனீக கல்யாணைகதாநனை எம்பெருமான் ஆவிர்ப்பவித்தருளியது பாலை வனத்தில் ஜலம் தோன்றுவதைப் போன்றது, மலை - ஒரு பர்வதமானது, குனிய - வணங்கும்படி, நின்ற – அதின் மேலே நின்ற, மலையென - மலையைப் போலவும், அதாவது ஒரு மலையின் மேல் மற்றொரு மலை நின்றாற் போலவும், மருள் – அஜ்ஞானம், அற – நஶிக்கும்படி, விளங்கும் – ப்ரகாஶிக்கிற, ஒளியென - ஜ்யோதிஸ்ஸு போலவும், மலர்–தாமரைப் பூவில் உண்டான, அயன் – ப்ரும்மா, உகந்த–ஆசைப்பட்ட, பயனென – ப்ரயோஜனம் போலவும், உருவில் – ஶரீரத்தில், உறைகின்ற – வஸிக்கிற, உயிரென – ஜீவாத்மாவைப் போலவும், அடியவர்–தாஸபூதர்கள், உகந்த–ஸந்தோஷித்த, அமுதென – அமுதம் போலவும், இருந்தது என்று ஒரு பதத்தைச் சேர்த்துக் கொள்ளவும். 18

இப்படிப் பகவானுடைய பெருமையை அநுபவித்து இப்படிப்பட்ட எம்பெருமானுக்கு அடியோம் என்னும்படியான பாக்யத்தைப் பெற்றோமே என்று தேவதைகள் அநுஸந்தித்த ப்ரகாரத்தை நிரூபித்தருளுகிறார்—‘ இவ்வண்ணம் ’ என்றாரம்பித்து. இவ்வண்ணம் – இந்த ப்ரகாரமாக. ஹக்தி ஸூகஷத்தாலும் – பக்தியின் மிகுதியினாலும். தொழுவது எழுவதாய் – ஸேவிப்பதும் மறுபடியும் எழுந்திருப்பதுமாய்.

‘ உத்தாய உத்தாய வாநஃ ஸூணஃ ’

என்கிறபடியே அடிக்கடி தொழுதும் அடிக்கடி எழுந்து நின்றும்.

என்று வேதாந்தஸாரமான ஸூக்தத்தை இங்ஙனே விண்ணப்பம் செய்தார்கள்.

சித்தசித்தென விரித்துரைத்தன
'அனைத்தமைத்துறையுமிறைவனர்
சிறிய பெரிய உருவடைய உடலமென
நடலமிலதிலகு நிலையினர்

பெறுவதே – பெற்றோமே. வேதாந்தஸாரமான – வேதாந்தார்த்தங்களை நிரூபிக்கிற ஶாரீரக ஶாஸ்திரத்தில் பதினாறு பாதங்களினாலும் ப்ரதிபாதிக்கப்படுகிற.

ப – ம். ] சித்து - சேதனங்கள், அசித்து - அசேதனங்கள், என – என்று, விரித்து - இவைகளின் உட்பிரிவுகளை விஸ்தாரமாக நிரூபித்து, உரைத்தன - சொல்லப்பட்டதான, அனைத்து - எல்லா வஸ்துக்களையும், அமைத்து - ஸ்ருஷ்டித்து, உறையும் - அவற்றிற்குள்ளே வஸிக்கும், இறைவனர் - நியமிக்குமவன். இத்தால் முதல் பாதத்தின் அர்த்தம் என்று ஸங்க்ரஹிக்கப்பட்ட 'ஸ்ரஷ்டா' (ஸ்ருஷ்டிப்பவன்) என்பது அருளிச்செய்யப்பட்டதாயிற்று. இதற்குப்பிறகு அவற்றிற்குள் அநுப்ரவேஶித்து நியமிப்பதும் அதற்கு உபயுக்தமாகையினால் நிரூபிக்கப்பட்டிருக்கிறது என்றறியத்தக்கது. சிறிய - ஸூக்ஷ்மங்களான, பெரிய - ஸ்தூலங்களான, உரு - ரூபத்தையுடைய வஸ்துக்கள், அடைய - எல்லாம், உடலமென - ஶரீரம் என்னும்படி, நடலம் - தோஷம், இலது - இல்லாமல், இலகு - ப்ரகாஶிக்கும், நிலையினர் - ஸ்திதியையுடையவர். இத்தால் இரண்டாம் பாதத்திற்கு அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்ட 'தேஹீ' (ஸகல சேதனாசேதனங்களையும் தனக்கு ஶரீரமாக உடையவன்) என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. 'சிறிய, பெரிய' என்பதினால் காரண கார்ய தஶைகளில் ஸூக்ஷ்ம ஸ்தூலங்களான அவஸ்தைகளை உடையவைகள் என்பது தெரிவிக்கப்படுகிறது. 'நடலமிலது' என்பதினால் இப்படி எல்லாச் சேதனாசேதனங்களிலும் அநுப்ரவேஶித்து நின்றாலும் அவைகளிடத்திலுள்ள தோஷங்களினால் தொடப்படாதவன் என்பது தெரிவிக்கப்படுகிறது. சித்திரத் தொழிலை ஒத்த - சித்திரம் எழுதுவதாகிய தொ



சித்திரத் தொழிலை யொத்த பத்தரொடு
முத்தர் பித்தி யெனு முணர்வினர்
சிதைவின் மறை நெறியிலெறிய வுரு
முறைகள் முறிய சிறையரிய நிறைவினர்

ழிலுக்கு ஸத்ருஶர்களான, பத்தரோடு - பத்த ஜீவர்களுடன், முத்தர் - முக்தர்களான ஜீவர்களும், இது நித்யர்களுக்கும் உபலக்ஷணம், இந்தச் சேதனர்களுக்கு, பித்தி - சுவர், எனும் - என்று சொல்லப்படுகிற, அதாவது இவைகளுக்கெல்லாம் ஆதாரமாகிய, உணர்வினர் – ஸங்கல்ப ரூப ஜ்ஞானத்தை உடையவர், அதாவது தன்னுடைய ஸங்கல்பத்தின் ஏகதேஶத்தினால் மற்ற எல்லாவற்றையும் தரித்துக்கொண்டிருப்பவர் என்று தாத்பர்யம். 'சித்திரத் தொழிலை' என்பதினாலே ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் ஆத்மாக்களுக்குத் தேவாதி பேதம் உண்டாகிறது என்பது த்யோதிதம்.

'ஸதேகா விஶ்வஶிஷ்டம் வித்ரும்', 'வஹதி வித்ருதஸ்ஷ்ண்தம்'

இத்யாதிகள் இங்கு அநுஸந்தேயம். இத்தால் மூன்றும் பாதத்தினுடைய அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்ட 'ஸ்வநிஷ்ட:' (தன்னையொழிந்த மற்ற எல்லா வஸ்துக்களையும் தன்னுடைய ஸங்கல்பத்தின் ஏக தேஶத்தினால் தாங்கிக் கொண்டிருப்பவன் என்று சொல்லவே தான் தன்னுடைய ஶக்தியினாலே தாங்கப்பட்டிருக்கிறான்) என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. சிதைவில் - சிதைவில்லாத, அதாவது அபௌருஷேயமாகையாலே ப்ரமம் முதலிய தோஷங்களினால் அந்யதாகரிக்க முடியாத, மறை - வேதத்தினுடைய, நெறியில் - மார்க்கத்தில், எறிய - 'ஏறிய' என்பது குறுகிக் கிடக்கிறது, ப்ரதிபாத்யமாக ஏறியிருக்கிற, இது நிறைவினர் என்பதற்கு விஶேஷணம், உரு – ரூபவத்துக்களான அசேதனங்களுடைய, முறைகள் – க்ரமங்கள், அதாவது ஸங்கோசம் விகாஸம் விகாரம் நாஶம் முதலியவைகள், முறிய – முறிந்து போகும்படி, அவைகள் தன்னிடத்தில் இருக்காதபடி, சிறை—காராக்ருஹம், அதாவது ஸங்கோசம், அரிய—செய்யமுடியாத, நிறைவினர் – குணங்களின் பூர்த்தியை உடையவர். இத்தால் நாலாவது பாதத்திற்கு அர்த்தம் என்று ஸங்க்ரஹிக்கப்பட்ட 'நிரவத்யஸ்ஹிதா' (நினைந்த எல்லாப் பொருள்கட்கும் வித்தாய் முதலில் சி

கத்துவிக்க வல கத்து வித்தை வழி
கற்றவர்க் கசைவில் மாயனார்
கபிலர் கண சரணர் சுகதர் சமணரரர்
வழிகளழியு மருண் மொழியினர்

தையாமே . . . உன் பெருமை' என்கிறபடியே எல்லையில்லாத பெருமையுடையவன் ) என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. இங்கு 'உரு முறைகள்' என்று அசேதனங்களின் க்ரமங்களைச் சொன்னது சேதனங்களுடைய க்ரமத்திற்கு உபலக்ஷணம். **கத்துவிக்க** – கத்தும்படி செய்ய, அதாவது ஜல்ப விதண்டா வாதங்களைச் செய்ய, **வல** – ஸாமர்த்தியத்தையுடைய, **கத்து வித்தை** – அப்படிப்பட்ட வாதங்களுடைய, **வழி** – மார்க்கங்களை, **கற்றவர்க்கு** – அப்யஸித்தவர்களுக்கு, **அசைவில்** – சலனமில்லாத, அதாவது அவர்களுடைய வாதங்களினாலே அசைக்கமுடியாத, **மாயனார்** – விசித்திர ஶக்தியுடையவர். இத்தால் யுக்திகளினாலும் ஸாங்க்ய ஸ்ம்ருத்யாதிகளினாலும் சலிப்பிக்க முடியாது என்பதைச் சொல்லுகிறது என்று ஸங்க்ரஹிக்கப்பட்ட ஐந்தாவது பாதத்தின் அர்த்தமான '**சுவாஹ்ரு வாய:**' என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. இங்கு யுக்திகளினால் சலிப்பிக்கவொண்ணாது என்று சொன்னது ஸாங்க்யாதி ஸ்ம்ருத்யாதிகளில் சொல்லப்படும் யுக்திகளினாலும் சலிப்பிக்க வொண்ணாது என்பதற்கு உபலக்ஷணம். அன்றிக்கே '**கத்து வித்தை**' என்கிற இடத்தில் ஜல்ப விதண்டா வாதங்களைப் பண்ணுவிக்கும் ஸாங்க்ய ஸ்ம்ருத்யாதிகளும் விவக்ஷிதங்களாகவுமாம். அதாவது இவர்களைக் கத்தும்படி செய்யும் வித்தை **கத்து வித்தை** என்னப்படுகிறது. **கபிலர்** - கபிலருடைய மதானுஸாரிகளான ஸாங்க்யர்கள், **கண சரணர்** - கணாத மதானுஸாரிகள், **சுகதர்** - பௌத்தர்கள், **சமணர்** - ஜைனர்கள், **அரர்** - பாஶுபத மதானுஸாரிகள், இவர்களுடைய, **வழிகள்**, அன்றிக்கே கபிலர் முதலிய பதங்கள் அந்தந்த மத ப்ரவர்த்தகர்களான கபிலர் கணாதர் புத்தர் சமணர் ருத்திரன் இவர்களையே குறிக்கிறதாகவுமாம், அப்பொழுது இவர்களினால் அந்தந்த ஆகமங்களில்நிரூபிக்கப்பட்ட மார்க்கங்கள் என்றர்த்தமாகும், **அழியும்** - நஶிக்கும்படியான, **அருள்** - க்ருபையினால் சொல்லப்பட்ட, **மொழியினர்** - வார்த்தையை உடையவர், அதாவது கபிலாதிகளுடைய ஆகமங்கள் வேத விருத்தங்களான படியால் அப்



கத்திலக்கிலு மருக்குலத்திலு
மசித்திலொக்குமொரு முதல்வனார்
கரண மிடு கடிய பதினொரிருடிகமு
மடைய முடியு மடி யிருடியார்

படி விரோதமில்லாமல்
'ஹதா நுகம்பயா'
என்கிறபடியே தன்னை ஆஶ்ரயித்தவர்களிடத்தில் க்ருபையினாலே தன்னால் சொல்லப்பட்ட பாஞ்சராத்திர ஶாஸ்திரத்தையுடையவர். இத்தால் ஆறுவது பாதத்தின் அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்டான '**ஸ்ரீ தாவ:**' என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. தன்னுடைய ஆஶ்ரிதர்களுக்கு ஆப்தன் என்றல்லவோ அதற்கு அர்த்தம். ஆகவே கபிலாதி ஶாஸ்திரங்களைக் கொண்டு அநாஶ்ரிதர்களை மோஹிப்பிப்பதும், ஸாத்விகமான பாஞ்சராத்திர ஶாஸ்திரத்தைக் கொண்டு தன் ஆஶ்ரிதர்களை ரக்ஷிப்பதும் செய்கிறான் என்றதாயிற்று. **கத்து** – இந்திரியங்களில், **இலக்கிலும்** – லக்ஷ்யங்களான, அதாவது இந்திரியங்களால் அறியப்படுமவைகளான ஆகாஶம் முதலிய பஞ்சபூதங்களிலும், **அருக்குலத்திலும்** – இந்திரியங்களினால் அறியப்படாத ஆத்மாக்களிலும், **அசித்தில்** – கீழ்ச் சொல்லப்படாத மஹான் முதலிய அசேதன வஸ்துக்களிலும், **ஒக்கும்** – ஸமமாயிருக்கிற, **ஒரு** – அத்விதீயமான, **முதல்வனார்** – காரண பூதன், அதாவது எல்லா வஸ்துக்களையும் ஒக்க ஸ்ருஷ்டித்தவன். இத்தால் ஏழாம் பாதத்தின் அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்ட '**வாதூஷௌஶவித ஜநநகூரசு**' என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. **கரணம்** – இந்திரியங்களை, **இடு** **கடிய** – ப்ரவேஶிக்கும்படி செய்வதற்கு அஶக்யங்களான, அதாவது அவைகளுக்கு விஷயமல்லாத, **பதினொரு**, **இருடிகமும்** – இந்திரியங்களும், **அடைய** – எல்லாம், **முடியும்** – நஶிக்கும்படியான, **அடி** – ஆதிகாலத்தில், **இருடியார்** – கண்ணுக்குப் புலப்படாத விஷயங்களை ஸாக்ஷாத்கரித்துக் கொண்டிருக்கும் ரிஷியாகிய பகவான். இத்தால் எட்டாம் பாதத்தின் அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்ட '**ஜநியாஷௌஶவித ஜநநகூரசு**' என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. **அனைத்துலகும்** – எல்லா லோகங்களிலும், **ஒத்து** – ஸமமாக இருந்து, **ஒற்றிஒற்**

ஒத்தனைத்துலகு மொற்றி யொற்றி வரு
மிப்பவத்திசையு மிசைவினர்
உருவ மருவ மெனு முலகில் முடகிலெனி
லுவமையிலதிலகு தலைவனர்
உத்தமப்படி வகுத்த வித்தைகளி
லுத்தரிக்க வுணர் குணவனர்

றிவரும் — மேல் மேலென வ்ருத்தி அடைந்து வருகிற, அன்றிக்கே ஒன்றை அநுஸரித்து மற்றொன்றாக கர்மம் அவித்யை வாஸனை ருசி ப்ரக்ருதி ஸம்பந்தம் என்பவை சக்கரம் போல் ஒன்றின் பின் ஒன்றாய் வருகிற, இப்பவத்து — இந்த ஸம்ஸாரத்தில், இசையும் — தானும் அவைகளுடன் சேர்ந்திருக்கும்படியான, இசைவினர் — அங்கீகாரத்தையுடையவர், அதாவது அவரவர்களுடைய கர்மாநுகுணமாக அவரவர்கள் ஸம்ஸரிக்கும்பொழுது தானும் கூட இருந்து நடத்துபவன். இத்தால் ஒன்பதாம் பாதத்தின் அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்ட ‘ ஸம்ஸ்ருதௌ தந்த்ரவாஹீ ’ என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. உருவமருவம் — ரூபத்தையுடைய சேதன வஸ்துக்கள், ரூபம் இல்லாத அசேதனவஸ்துக்கள், எனும் — என்னப்படுகிற, உலகில் — லோகங்களில், இருக்கச் செய்தே என்று ஒரு பதத்தைச் சேர்த்துக்கொள்ள வேண்டும், முடகு — ஸங்கோசம், இல் — இல்லாதவன், எனில் — என்கிற விஷயத்தில், உவமை இலது — ஸத்ருஶமான வஸ்து இல்லாமல், இலகு — ப்ரகாஶித்துக்கொண்டிருக்கிற, தலைவனர் — ப்ரதானமாய் இருப்பவன், இத்தால் சேதனசேதன வஸ்துக்களுடன் கலந்திருக்கச் செய்தேயும் அவைகளினுடைய தோஷங்கள் தன்னிடத்தில் தட்டாதபடி ப்ரகாஶிக்கிறான் என்று

‘ திவ்யோ தேவ ஏகோ நாராயண: ’

இத்யாதிகளில் ஶ்ருதி உத்கோஷித்ததை விசாரிக்கிற பத்தாம் பாதத்தின் அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்ட ‘ நிர்தோஷஶ்சாத்விதீய: ’ என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. ஆதி பதம் கல்யாணைகதாநத்வத்தைக் குறிக்கிறது. உத்தமப்படி — உத்தமமான ப்ரகாரத்திலே, அதாவது அல்பங்களான காம்ய பலங்களுக்காகவன்றிக்கே பரம புருஷார்த்த ஸாதனமாக, வகுத்த — பிரித்துச் சொல்லப்பட்ட, வித்தைகளில் — த்வா த்ரிம்ஶத் ப்ருஹ்ம வித்யைகளில், இதின் விஸ்தாரத்தை மேலே அநுபந்தத்தில் கண்டு கொள்வது, உத்தரிக்க — ஸம்ஸாரத்தில் நின்றும் உத்தாரணம் செய்வதற்காக, உணர் — அந்தந்த வித்யா நிஷ்டர்களினால் அநுஸந்திக்கப்படுகிற, குணவனர் — குணத்தையுடையவர். இத்தால் பதினோராம் பாதத்தின் அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்ட ‘ பஹுபஜநபதம் ’ ( அனேகம் விதங்களான உபாஸனங்களுக்கு விஷயமானவர் ) என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது.



உரிய கிரிசைகளி லரிய தொரு விரகு
தெரிய விரையுமவர் பரிவினர்
சத்தசத்தெனு மனைத் தணைத்தவினை
தொத்தறுக்க வல துணிவினர்

உரிய கிரிசைகளில் — அவரவர்கள் வர்ணாஶ்ரமத்திற்குசிதமான நித்ய நைமித்திக காம்ய கர்மங்களில், அரியது — அநுஷ்டிக்க முடியாததான, ஒரு விரகு — ஒரு உபாயத்தினால், அதாவது பலாபிஸந்தியில்லாமல் ஸாத்விக த்யாகத்துடன் அநுஷ்டிப்பதினால், தெரிய — தன்னை உள்ளபடி அறிந்து கொள்ள, விரையுமவர் — த்வரிக்குமவர்களிடத்தில், பரிவினர் — க்ருபையை உடையவர். இத்தால்

‘ தேஷாமஹம் ஸமுத்தர்தா ம்ருத்யு ஸம்ஸார ஸாகராத் | பவாமி ந சிராத் பார்த ’

என்று அருளிச்செய்யப்பட்டது ஸூசிப்பிக்கப்படுகிறது. ஸாத்விக த்யாகத்துடன் அநுஷ்டிக்கப்படும் கர்மங்களினால் ப்ரீதனாய் அவர்களுக்கு பர பக்திபரஜ்ஞாநாதிகளை உண்டாக்குகிறார் என்றதாயிற்று. இப்படி பனிரண்டாம் பாதத்திற்கு அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்ட ‘ ஸ்வாராதஶ்ச ஸ்வஸாத்ய: ’ என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. ‘ உரிய கிரிசைகள் ’ என்பதினால் விதுராதிகளுக்கும் அவர்களுக்குரிய கர்மங்களைச்செய்து பலம் பெறலாம் என்பது த்யோதிதம். இங்கு பார்யையை இழந்தவன் விதுரன் என்னப்படுகிறான். சத்து - ஸத்து, அதாவது புண்யங்கள், அசத்து - பாபங்கள், எனும் - என்று சொல்லப்பட்ட, அனைத்து - எல்லா, அணைத்த - நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்கிற, வினை - பாபங்களினால்,

‘ ந ஸுக்ருதம் ந து்ஷ்க்ருதம் ஸர்வே பாப்மாந: ’

என்று ஶ்ருதி புண்யத்தையும் பாபமாக நிரூபித்ததைத் திருவுள்ளம்

சரியுமளவி லுரியவரை யறிவரிய
தமனி நெறி சொருகு விரகினர்
தத்துவத் திரளுதைத் துதைத்தடைவு
தத்துவிக்கு மவர் தலைவனர்
தருக வுணரு மவர் சரண மணுக
விடலரிய வருள் வரத ரடியமே. 19

---

பற்றி இங்கும் இரண்டு வித கர்மங்களையும் வினை என்று அருளிச் செய்தது, தோத்து - ஸம்பந்தத்தை, அறுக்கவல - அறுக்கக் கூடிய ஸாமர்த்தியத்தையுடைய, துணிவினர் - நிஶ்சயத்தையுடையவர், அதாவது இவனுடைய ஸங்கல்பமுண்டானல் வேறு தடுப்பார் இல்லாமையாலே துணிவே அறுக்கக்கூடியது என்று தாத்பர்யம். வேறு ஒரு ஸஹாயத்தை எதிர் பாராமல் இருப்பதும் விவக்ஷிதம். இத்தால் பதிமூன்ரும் பாதத்தின் அர்த்தமாக ஸங்கிரஹிக்கப்பட்ட 'வாவஷிஃ' என்பது நிரூபிக்கப்பட்டதாயிற்று. சரியுமளவில் - தேஹம் சரிந்து போகும் காலத்தில், அதாவது ஶரீர விஶ்லேஷ ஸமயத்தில், உரியவரை - அர்ச்சிராதி கதியாலே போகக்கூடிய யோக்யதையுடையவர்களை, அறிவரிய - பகவத் கடாக்ஷத்தாலன்றி அறிய முடியாததான,

'தஸ்ஷுகாஶிதவாரஃ'

என்னப்பட்டதிறே, தமனி நெறி - நாற்றோராவதான ப்ரும்மநாடியில், சொருகு - ப்ரவேஶிப்பிக்கும்படியான, விரகினர் – உபாயத்தை அறிந்தவர். இத்தால் பதிநாலாம் பாதத்தின் அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்ட 'ஷுஹ நாஷீ மதிகூஜஃ' என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. தத்துவ – ப்ராக்ருத தத்வங்களினுடைய, திரள் – ஸமூஹத்தை, உதைத்துதைத்து – காலாலே ஆக்ரமித்து, அடைவு – க்ரமத்தில், தத்துவிக்குமவர் – ப்ரக்ருதி மண்டலத்தைத் தாண்டுவிக்குமவரான ஆர்ச்சிஸ்ஸு முதலிய ஆதிவாஹிகர்களுக்கு, தலைவனர் – ப்ரதானரானவர், அதாவது ஆதிவாஹிகர்களைக் கொண்டு தானே ப்ரதானமாக வழி நடத்துமவர். இத்தால் பதினைந்தாம் பாதத்தின் அர்த்தமாக 'சுதிவஹஃ' என்று ஸங்க்ரஹிக்கப்பட்டது நிரூபிக்கப்பட்டதாகிறது. தருக – தங்களுக்கு அவன் திருவடிகளை அனுபாவ்யமாகக் கொடுப்பதற்காக, உணருமவர் - ந்யாஸோபாஸனதிகளைச் செய்யுமவர், சரணமணுக – அவனுடைய திருவடிகளைக் கிட்டி அனுபவிக்கும்பொழுது, விடலரிய – விடுவதற்கு அஶக்யமான, அதாவது போக்யத்வாதிஶயத்தினல் விட முடியாதவர், இப்படிப்பட்டவராய், அருள் – க்ருபையினலே, வரதர் – வரங்களைக் கொடுத்தருளும் பகவானுக்கு, அடியம் – தாஸபூதர்களானேம், அதாவது இதை விட வேறு புருஷார்த்தம் உண்டோ என்று அனுஸந்தித்தார்கள் என்றபடி. இத்தால் பதினறும் பாதத்தின் அர்த்தமாக ஸங்க்ரஹிக்கப்பட்ட 'ஸாஜ்ஞஃ' என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. பரம பதத்தில் பகவானுடைய கல்யாணகுணங்களுக்குத்தோற்று அடிமை செய்தாலும் அபஹதபாப்மத்வாதி குணங்களின் ஆவிர்ப்பாவத்தினல் பரமாத்மாவிற்கு ஸத்ருஶனகவிறே இவன் இருப்பது என்று தாத்பர்யம். 19



ஷூஹா அப்பொழுது ஸம்ஹ்ரூஷ ஸஞ்தோஷ ஸாகு ஸங்களையுடையவனய்க் கொண்டு கிட்டிச் சென்று ஸூரிஸேவ்யமான ஶுபாஶ்ரயத்தை ஸாக்ஷாத்கரித்துத் தான் பெற்ற பேற்றை இங்ஙனே பேசினன்.

திருமகள் மண்மகள் நீளை முதலா வெல்லாத்
தேவியரும் தன்னுடனே திகழ்ந்து நிற்கத்

---

இப்படிப் பகவானை எல்லோரும் அனுபவித்தபடியை நிரூபித்து ப்ரும்மா அனுஸந்தித்தபடியைத் தனித்து அருளிச்செய்கிறர்— 'ஷூஹா' என்றாரம்பித்து. ஸம்ஹ்ரூஷ – பரபரப்பு. ஸாத்வஸ - பயம். ஸூரிஸேவ்யமான – நித்ய ஸூரிகளினல் அனுபவிக்கத் தக்கதான. ஶுபாஶ்ரயத்தை – ஶுபமாயும் ஆஶ்ரயமாயுமிருக்கிற, அதாவது பாபங்களைப் போக்கடிக்கக் கூடியதாயும் த்யானத்திற்கு ஸுலபமாய் கோசரமாகும்படியாயும் இருக்கிற திவ்யமங்கள விக்ரஹத்தை, பெற்ற பேற்றை – அடைந்த ப்ரயோஜனத்தை.

ப்ரும்மா பேசின ப்ரகாரத்தை ஒரு பாட்டாலே நிரூபித்தருளுகிறர்—'திருமகள்' என்றாரம்பித்து.

ப-ம்.] திருமகள் – பெரிய பிராட்டியார், மண் மகள் – பூமிப் பிராட்டியார், நீளை - நீளா தேவி, முதலா – இவர்கள் முதலான, எல்லாத் தேவியரும் - எல்லாத் தேவிமார்களும், தன்னுடனே – தன்னோடுகூட, திகழ்ந்து நிற்க – ப்ரகாஶித்துக் கொண்டு நிற்க, இருமூன்று –

தருமமிரு மூன்று முதலனைத்தும் தோன்றத்
தன்னனைய சூரிகள் தன்னடிக் கீழ் வாழ
அருமறை சேரளவில்லா அவனியின் கண்
அரவணை மேல் வீற்றிருப்பாலனைத்தும் காக்கும்
கருமணியைக் கரிகிரி மேல் கண்டேனென்றன்
கடுவினைகளனைத்தும் நான் கண்டிலேனே. 20

---

ஆறுன, தருமம் — ஜ்ஞானம் ஶக்தி வீர்யம் பலம் தேஜஸ் ஐஶ்வர்யம் என்னப்படும் ஸ்வாபாவிகமான குணங்கள், முதல் - முதலான, அனைத்தும் - எல்லாக் கல்யாண குணங்களும், தோன்ற — ப்ரகாஶிக்க, தன்னனைய — தனக்கு ஸத்ருஶர்களான, அதாவது பகவானைப்போல ஒரு பொழுதும் ஜ்ஞான ஸங்கோசாதிகள் இல்லாதவர்களான, அன்றிக்கே

'ஸ வயஸ ஐவ யெஂ நித்ய நிஜெஂாஷ ஶஸாஃ'

என்கிறபடியே ஒரே வயதையுடைய, சூரிகள் — நித்ய ஸூரிகள், தன்னடிக் கீழ் — தன்னுடைய திருவடிகளின் கீழே, வாழ — வாழும்படியாக, அதாவது 'நின் தாளிணைக் கீழ் வாழ்ச்சி யான் சேரும் வகை அருளாய்' என்கிறபடியே வாழ்ந்து கொண்டிருக்க, அரு மறை சேர் — ஒருவராலும் உள்ளபடியே அறியமுடியாததான வேதங்களினால் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற, அளவில்லா அவனியின் கண் — அளவில்லாததான பரம பதமாகிற நித்ய விபூதியிலே, அரவணை மேல் - ஆதிஶேஷனாகிற பர்யங்கத்தின் மேலே, வீற்றிருப்பால் - தன்னுடைய உத்கர்ஷம் தோன்றும்படி உட்கார்ந்திருப்பதினால், இத்தால் பரம பதத்தில் பரத்வமே விஞ்சியிருக்கும் என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது, அனைத்தும் — எல்லா லோகங்களையும், காக்கும் — ரக்ஷிக்கிற,

'ஶ்ரீஜாநாஂபவாஹாஸஂஹாஸஃ வ்ருதாவவாநு,
'ஶுக்ஷணாநாஂவரொ ராஜஃ வ்ரயிவீஜநவாஶுயஃ'

என்றாற்போலே படை எடுத்து விடுகை, ஶாஸனாதிகளைச் செய்கை, முதலிய வ்யாபாரங்கள் ஒன்றும் இல்லாமல் 'வீற்றிருந்து ஏழுலகும் தனிக் கோல் செல்ல வீவில் சீர் ஆற்றல் மிக்காளும் அம்மானை' என்கிறபடியே தன்னுடைய வீற்றிருத்தலாலேயே ஸர்வ லோக ஸம்ரக்ஷணம் செய்கிற என்றபடி, கரு மணியை — நீல ரத்னம் போன்றவனை, கரிகிரி மேல் — ஸ்ரீ ஹஸ்திகிரியின் மேல், கண்டேன் — ப்ரத்ய



இப்படிக் கண்கள் காண்டற்கரிய ஶ்ரீநாராயவிஷயத்தைக் கண்ட வ்ருஹ்மா

'ததஃஸ்ஷாஂஶீக்ஷ்ய வாஂரஃஸ்தம் ஹரிஂ விதாந வெதிஷ்ய ஶதவீ ஸஶவ்ருஹஂ | ஸ தக்ஷணொத்ஹூத ஸாஂவாணஂவாஶுஂதொ யயள ததா க்ருத்ய விவெகஶூஷ்தாஂ | வ்ருதக்ஷிணஂ வெரதி தயா ஶவ்ருதக்ஷிணஂ வ்ருயாதி தூ ரஂ வாஂநரெதி ஸநியிஂ | கரெண வஸஶஂ ஶஶாஜஂ தஅவாஂஃ வ்ரியெண மாஸஂ வரிஷஸ்ஜெ க்ஷணாஂ ||'

---

க்ஷமாகப் பார்த்தேன், என்றன் — என்னுடைய, கடு வினைகள் — க்ரூரங்களான பாபங்கள், அனைத்தும் — எல்லாவற்றையும், நான், கண்டிலேனே — காணவில்லை, இதற்கு முன் அந்தப் பாபங்களைத் தவிர வேறொன்றையும் பாராத நான் இப்பொழுது அவைகளில் ஒன்றைக் கூட பார்க்கவில்லை என்றபடி. 20

கண்கள் காண்டற் கரிய — கண்களால் பார்ப்பதற்கு அஶக்யமான, ஶ்ரீநாராய விஷயத்தை — இச்சைக்கு விஷயமானவஸ்துவை. ததஃ — பிறகு, வாஂரஃஸ்தம் - முன்பே நிற்கிற, ஶதவீ ஸஶவ்ருஹஂ — காயாம்பூ வர்ணம்போன்ற காந்தியையுடைய, தம் — அந்த, ஹரிம் — பகவானை, விதாந வெதிஷ்யாம் — யஜ்ஞத்தின் வேதியில், உஶீக்ஷ்ய - பார்த்து, தக்ஷணொத்ஹூத - அந்த க்ஷணத்திலே உண்டான, ஸாஂவாணஂவாஶுஂதஃ - ஸந்தோஷமாகிற ஸமுத்திரத்தில் முழுகினவராய், க்ருத்ய விவெகஶூஷ்தாம் - இது செய்யத் தகுந்தது இது செய்யத்தகாதது என்கிற ஜ்ஞானமில்லாமையை, ததா - அப்பொழுது, ஸஃ - அந்த ப்ருஹ்மா, யயள - அடைந்தார். அப்படி அவர் செய்த கார்யங்கள் மேலே நிரூபிக்கப்படுகின்றன, வ்ருதக்ஷிணம் - ப்ரதக்ஷிணமாக, வெரதி - வருகிறார், ததா - அப்படியே, ஶவ்ருதக்ஷிணம் - அப்ரதக்ஷிணமாக வருகிறார், தூரம் — வெகுதூரம், வ்ருயாதி - செல்லுகிறார், வாஂநஃ ஸநியிம் ஏதி - மறுபடியும் ஸமீபத்தை அடைகிறார், தஅவாஂஃ - அந்தப் பகவானுடைய திருமேனியை, கரெண - கைகளினால், வஸஶஂ - தொட்டார், ஶஶாஜஂ - துடைத்தார், வ்ரியெண - ப்ரீதியினால், மாஸம் -

இப்படி 'மொய்ம்மாம் பூம்பொழில்' படியே ஸுகஉமாக ஹஷவெஷிதங்களைப் பண்ணின ஸஹா சிறிது போது ஒடிக் கூடித் தரித்து நாச்சிமாருடனே பெரிய பெருமாள் எழுந்தருளியிருக்கிற நிலையை இங்ஙனே ஸீநாஹவித்தான்.

பெடையிரண்டை யொரனமடைந்து
பிரிந்திடா வகைபேசலாம்

---

கெட்டியாக, க்ஷணம் - க்ஷண காலம், வஙிஷவஜெ — கட்டிக் கொண்டார். 'மோய்ம்மாம் பூம்பொழில்' இத்யாதி—'மொய்ம்மாம் பூம்பொழில்' என்றுரம்பிக்கும்திருவாய்மொழியில் ஆழ்வார் அருளிச் செய்தபடியே. இத்திருவாய்மொழியின் அர்த்தத்தை இவர் தாமே ஸ்ரீ த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நவளியில் 'ஙளெ ஙூஹதந வஷொஜாஉகசவ' என்று ஸங்க்ரஹித்தாரிறே. அதாவது தன்னுடைய திருமேனியின் ஸௌஷ்டவத்தில் ஈடுபட்டவர்களை பகவான் பிச்சேற்றி அக்ரமமான ஹர்ஷ சேஷ்டிதங்களையுடையவர்களாகப்பண்ணுவன் என்றபடி. ஸுகஉமாக — ஒரு வரிசை க்ரமம் இல்லாமல், அதாவது இதற்குப் பிறகு இது செய்வது என்கிற வ்யவஸ்தை இல்லாமல். ஹஷவெஷிதங்களை — ஸந்தோஷ வ்யாபாரங்களை. சிறிது போது — கொஞ்ச காலம்.

இப்படி ப்ரும்மா பகவானை திவ்ய மஹிஷிகளுடன் அனுபவித்த ப்ரகாரத்தை ஒரு பாட்டாலே ஸங்க்ரஹித்தருளுகிறார்—'பெடை யிரண்டை' என்றுரம்பித்து.

ப—ம்.] அடி இரண்டையும் — தம்முடைய திருவடிகள் இரண்டையும், அடையும் — உபாயமாயும் பலமாயும் அடைந்த, அன்பர் — ப்ரீதி உடையவர்களினுல், அறிந்த — அறியப்பட்டவரான, இத்தால் ப்ரீதி இல்லாதவர்களுக்கு அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தின் ஸேவை கிடைக்காது என்பது த்யோதிதம், பேரருளாளனுர் - அதிகமான க்ருபையையுடைய ஸ்ரீ தேவப்பெருமாள், அணுகு — ஸமீபத்தில் இருக்கிற, மலர்மகள் — லக்ஷ்மீ, அவனி மகள் — பூமிப்பிராட்டி, ஒடு - இவர்களுடன், கரிகிரி - ஸ்ரீ ஹஸ்திகிரியில், நிலைகவர்தல் — நின்ற



பெருகு மருவிகளருகு மருவிய
பெரிய மணி வரை பயிலலாம்
பிடியிரண்டொடு களபமொன்று
பிணைந்த பேரழகோதலாம்
பிரிவிலொளியொடு நிழலு மருகுறு
மிரவி யிலகுதல் பரவலாம்
கொடியிரண்டொடு விடவி யொன்று
குளிர்ந்தவாறு குலாவலாம்

---

ருளுகை, இது மேலே 'பேசலாம்', 'பயிலலாம்' இத்யாதிகளுடன் அந்வயிக்கிறது, பெடை இரண்டை - இரண்டு பெண் ஹம்ஸங்களை, ஓர் அனம் - ஒரு புருஷ ஹம்ஸம், அடைந்து - சேர்ந்து, பிரிந்திடா வகை — பிரியாமல் இருக்கும் வண்ணம் என்று, பேசலாம், அதாவது பிரியாமல் எப்பொழுதும் சேர்ந்திருக்கிறது போல் இருக்கிறது என்று சொல்லலாம், இப்படியே மேலும் சொல்லிக் கொள்வது, பெருகும் — பெருகுகிற, அருவிகள் - மலை அருவிகளின், அருகு — ஸமீபத்திலே, மருவிய - சேர்ந்திருக்கிற, பெரிய — உன்னதமான, மணி வரை - நீல மணி மயமான பர்வதத்தை, பயிலலாம் — புத்தியினுல் அடிக்கடி அப்யஸிக்கலாம், அதாவது இதற்கு ஸமமாக இருப்பதாக அனுஸந்திக்கலாமென்றபடி, களபம் ஒன்று - ஒரு யானையானது, பிடி இரண்டோடு - இரண்டு பெண் யானைகளுடன், பிணைந்த - சேர்ந்திருக்கிற, பேரழகு— உயர்ந்த ஸௌந்தர்யத்தை, ஓதலாம் - அடிக்கடி சொல்லலாம்,

'வஹ வஙவஙிஜ வாவஸா ஜெஷிநீஹஂ வஙாஹஂ | நஹவநஜிவ உஜஊநு வாவஙாஙிஂ நதாநீஂ ஜஙஸவஙிஉ நஒவெ ஜஙஸஹஷீவ ஃவஂநு'

என்றிவர் தாமே அருளிச்செய்திருப்பது இங்கனுஸந்தேயம், பிரிவில் - பிரிவில்லாத, ஒளியொடு — ப்ரபையோடு, நிழலும் - சாயையும், அருகு- ஸமீபத்தை, உறும் - அடைந்திருக்கிற, இரவி - ஸூர்யனுடைய, இலகுதல் — ப்ரகாஶத்தை, பரவலாம் - ஸ்தோத்திரம் செய்யலாம், கொடி இரண்டோடு — இரண்டு கொடிகளுடனே, விடவி யொன்று - ஒரு வ்ருக்ஷமானது, குளிர்ந்தவாறு - குளிர்ந்திருந்த ப்ரகாரத்தை, குலாவலாம்

குறைவில் சுருதியு நினைவு மிலகிய
தரும வரு நிலை யென்னலாம்
அடியிரண்டையு மடையு மன்ப
ரறிந்த பேரருளாளனார்
அஞ்சு மலர்மக ளவனி மகளொடு
கரடி கிரி நிலை கவர்தலே. 21

அநந்தரம் அநந்த கல்யாண குணாணர்ணவரான பெருமாளுடைய திவ்ய குணங்களை அநுபவிக்கத் தொடங்கி ஒவ்வொரு ஆகாரங்களுக்கு ஒவ்வொரு உபமாநாவஸங்களைத் தேடி குண ஸமுதாயத்துக்கு ஒரு உபமாநாவஸங்களும் தேட வொண்ணாதென்று கொண்டாடினான்.

வேரொப்பார் விண் முதலாம் காவுக்கெல்லாம்

---

- பெருமையுடன் சொல்லலாம், குறைவில் — அபௌருஷேயமாகையாலே குறையொன்றுமில்லாத, சுருதியும் - வேதமும், நினைவும் — ஸ்ம்ருதியும், இலகிய — தனக்கு ப்ரதிபாதகங்களாக ப்ரகாசிக்கிற, தரும — தர்மத்தினுடைய, அரு — ஸூக்ஷ்மமான, நிலை — ஸ்திதி, என்னலாம் — என்று சொல்லலாம். 21

இப்படிப் பகவானை அநுபவித்துப் பிறகு பகவானுடைய கல்யாண குணங்களை அநுபவித்தான் என்று நிரூபித்தருளுகிறார் — ‘அநந்தரம்’ என்றாரம்பித்து. ‘அநந்த’ இத்யாதி—எண்ணிறந்த கல்யாண குணங்களுக்கு ஸமுத்திரம் போன்ற. குணஸமுதாயத்துக்கு—இப்படிப்பட்ட குணங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்திருப்பதற்கு.

இப்படி மொத்தமாக நிரூபிக்கப்பட்டதையே பிரித்து அருளிச் செய்கிறார்—‘வேரொப்பார்’ என்றாரம்பித்து.

ப — ம்.] அருளாளர் - க்ருபையினாலே ஆளப்படுமவரான ஸ்ரீ தேவப்பெருமாள், விண் முதலாம் - ஆகாசம் முதலான, காவுக் கெல்லாம் — ப்ரபஞ்சமாகிற தோப்புக்களுக்கெல்லாம், வேரொப்பார் — வே



விழி யொப்பார் வேதமெனும் கண் தனக்கு
காரொப்பார் கருணை மழை பொழிந்திடுங் கால்
கடலொப்பார் கண்டிடினும் காணக் கூத்தால்
நீரொப்பார் நிலமளிக்கும் தன்மை தன்னால்
நிலமொப்பார் நெடும் பிழைகள் பொறுக்குநேரால்

---

ருக்கு ஸத்ருசமானவர், அதாவது எப்படி வேர் மரத்திற்கு ஆதாரமாயிருக்கிறதோ அதைப்போலப் பகவானும் எல்லா ப்ரபஞ்சத்திற்கும் ஆதாரம் என்றபடி, வேத மெனும் - வேதம் என்று சொல்லப்படுகிற, கண் தனக்கு - கண்ணுக்கு, விழியொப்பார் — கரு விழிக்கு ஸமமானவர், அதாவது கருவிழி இல்லாவிட்டால் எப்படிக் கண்கள் வஸ்துக்களைப் பார்க்கமுடியாதோ அதைப் போல பகவானுடைய அநுக்ரஹம் இல்லாவிட்டால் வேதங்களின் உண்மையான அர்த்தங்களை அறியமுடியாது என்பது த்யோதிதம், பகவான் தானும்

‘ பக்த்யா த்வநந்யயா சக்ய அஹமேவம் விதோऽர்ஜுந |
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேந ’

என்றிறே அருளிச்செய்தது.

‘ ஸ்வஜ்ஞாநம் மதோ பக்த்யா ஸாஸ்த்ரதோ வா ஜநார்தந ’

இத்யாதிகள் இங்கு அநுஸந்தேயங்கள், கருணை மழை - க்ருபையாகிற மழையை, பொழிந்திடுங்கால் - வர்ஷிக்கும் பொழுது, கார் - கறுத்த மேகத்திற்கு, ஒப்பார் - ஸத்ருசராவார், அதாவது வித்யாஸம் பார்க்காமல் எல்லாரையும் ஒரே மாதிரியாகக் கடாக்ஷிக்கிறான் என்றபடி, கண்டிடினும் - ப்ரத்யக்ஷமாகப் பார்த்தாலும், காணக் கூத்தால் - நம்மால் காணப்படாத நாட்யத்தால், அதாவது, ஆச்சர்யமான சேஷ்டிதங்களால், கடல் ஒப்பார் - ஸமுத்திரத்திற்கு ஸமமானவர், அதாவது ஸமுத்திரம் கண்ணால் பார்க்கப்பட்டிருந்தபோதிலும் அதற்குள்ளே இருக்கும் வஸ்துக்கள் ஒன்றையும் நாம் அறியமுடியாதாப்போலே பகவானை நாம் நேரில் பார்த்தாலும் அவனுடைய திவ்ய சேஷ்டிதங்களை அறியமுடியாது என்றபடி, நிலம் - பூமியை, அளிக்கும்-காப்பாற்றும், தன்மை தன்னால் - ஸ்வபாவத்தினால், நீரொப்பார் - ஜலத்திற்கு ஸத்ருசமாயிருப்பார், நெடும் - வெகு காலமாகச் செய்யப்பட்ட, பிழைகள் - அபராதங்களை, பொறுக்கும் — க்ஷமித்தருளும், நேரால் — ஆர்ஜவ குணத்தினால், நிலமொப்பார் - பூமிக்கு ஸத்ருசமானவர்,

ஆரொப்பா ரிவர் குணங்கள் அனைத்தும் கண்டாக்ல்
அருளாளர் தாமெனினும் தமக்கொவ்வாரே. 22

இப்படிப் பெருமாளுடைய முகங்களை வகையும் துகையுமாக வகுத்து அநுபவிக்கிற ஸர்வதோமுகனான ப்ரஹ்மா மேல் முகத்தாலே யஜ்ஞவாடத்தின் மேல் பாதியிலே வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தையும் கீழ் முகத்தாலே உத்தரவேதியிலே நின்றருளின

---

'ஸமாப்யதிகவர்ஜித:'

என்னப்பட்டதிறே, இவர் குணங்கள்—இவருடைய குணங்களை, அனைத்தும் — எல்லாவற்றையும், கண்டால் — நிரூபித்துப் பார்த்தால், ஆர்- யார், ஒப்பார் — இவருக்கு ஸத்ருஶராவார், ஒருவரும் ஸத்ருஶராகமாட்டார்கள், அதாவது ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொன்றே ஸத்ருஶமாக நிரூபிக்கலாமேயன்றி எல்லாவற்றிற்கும் சேர்த்து ஸத்ருஶமாக ஒன்றும் நிரூபிக்கமுடியாது என்றபடி. கீழ் நிரூபிக்கப்பட்ட 'வேர்' முதலியவைகளும் 'கட்டுரைக்கில் தாமரை நின் கண் பாதம் கை யொவ்வா' என்கிற ந்யாயத்தினால் உபமான ஆபாஸங்களேயன்றி நேர் கொடு நேரே த்ருஷ்டாந்தமாகமாட்டாது, ஆனாலும் இந்தக் குணஸமுதாயத்திற்கோவெனில் இப்படிப்பட்ட உபமாநாபாஸம் கூடக் கிடையாது என்றதாயிற்று, இப்படி வேறு ஒரு வஸ்துக்களும் தனக்கு உபமானமாகாவிட்டாலும் தானே தனக்கு ஸத்ருஶன் என்னவொண்ணாதோ என்னில் அருளிச்செய்கிறார் மேலே, தாமெனினும் — தானே என்றாலும், தமக்கு, ஒவ்வார் - ஸத்ருஶமாகமாட்டார், அதாவது தன்னோடு அபின்னரான பரம பத நாதனும் ஸ்ரீதேவப்பெருமாளுக்கு ஸத்ருஶராகமாட்டார் என்றபடி. அங்கு பரத்வம் விஞ்சியிருப்பதினாலும், இங்கு ஸௌலப்யம் விஞ்சியிருப்பதினாலும் ஸத்ருஶமாகமாட்டார் என்று தாத்பர்யம். அன்றிக்கே திருமேனியின் ஸௌஷ்டவத்தில் விஞ்சியிருப்பர் என்றபடியாகவுமாம். கல் நெஞ்சரும் கரைந்துருகும்படியிறே அர்ச்சாரூபத்தில் ஸௌந்தர்யமிருப்பது. 22

வகையும் துகையுமாக — தனித் தனியாகவும் சேர்த்தும். வகுத்து — பிரித்து. ஸர்வதோமுகனை - நான்கு திக்குகளிலும் முகங்களையுடையவனை. மேல் முகத்தாலே — மேற்கு திக்கை நோ



பெருமாளையும் சேர அநுபவித்து இங்ஙனே அநுஸந்தித்தான்—

ஏகம் வேகவதீ மத்யே ஹஸ்திஶைலே ச த்ருஶ்யதே ।
உபாய ஃபலபாவேந ஸ்வயம் வ்யக்தம் பரம் மஹ: ॥

—என்று.

இப்படி ப்ரஹ்மா ஹர்ஷபரவசனாய் முகிழ்த்த உடம்பும் பனி அரும்பின கண்களும் தழுதழுத்த மிடறும் தளர்ந்த நிலையுமாய்க் கொண்டு தன் அதிகாரச் சுமையை மறந்து அடிமையிலே அடி கொண்டு ஸ்தோத்ர பரம்பரையை விண்ணப்பம் செய்ய, ப்ரஸாத ஸுமுகரான பெருமாள் உனக்கு வேண்டின வரம் கொள்வாய் என்று அருளிச்செய்தார்.

---

க்கியிருக்கும் முகத்தாலே. சேர அநுபவித்து - ஒரே காலத்தில் அநுபவித்து.

உபாய ஃபல பாவேந - உபாயமாயும் பலமாயும் இருப்பதினால், ஸ்வயம் வ்யக்தம் — தானே தோன்றியிருக்கிற, ஏகம் — ஒரு, பரம் - உயர்ந்த, மஹ: - தேஜஸ்ஸு, வேகவதீ மத்யே - வேகவதியின் மத்தியிலும், ஹஸ்திஶைலே ச - ஸ்ரீ ஹஸ்திகிரியிலும், த்ருஶ்யதே - காணப்படுகிறது, அதாவது வேகவதியின் மத்தியிலே இருக்கும் பகவான் யஜ்ஞத்தை ரக்ஷித்தபடியினால் உபாயமாகவும், அந்த யஜ்ஞத்தின் பலமாக ஸேவை ஸாதித்த ஸ்ரீ தேவாதிராஜன் பலமாகவும் இருக்கிறார் என்றபடி.

முகிழ்த்த - மயிர்க் கூச்சலுடன் கூடிய, பனி அரும்பின - ஆநந்தக்கண்ணீரைப் பெருக்குகிற. மிடறு — தொண்டை. அதிகாரச்சுமையை - ப்ரும்மத்வமாகிற அதிகாரத்தின் பாரத்தை. அடிமையிலே - தாஸ்யத்தில், அடி கொண்டு - கால் ஊன்றி நின்று. 'ப்ரஸாத,' இத்யாதி —அநுக்ரஹம் செய்ய வேண்டும் என்கிற எண்ணத்தினால் ப்ரஸன்னமான திருமுக மண்டலத்தையுடையவரான,

வரம் வரய தஸ்மாத் த்வம் யதாபிமதமாத்மந: |
ஸர்வம் ஸம்பத்ஸ்யதே பும்ஸாம் மயி த்ருஷ்டிபதம் கதே ||

எந்நிலமும் குரத்தால் குறி செய்த வெழிற் பரி கொண்டு
அன்னமுயர்த்தசெய்யோனன்றுவேள்வி செய்வேதியின்
மேல்
முன்னிலையாகிய மூர்த்தியுடன் நான்முக ! மற்றுமுனக்கு
என்ன வரம் தருவோமென்று நாதனியம்பினனே. 23

அப்பொழுது ப்ரஹ்மாவும் ' நித்யஸூரிகள் ஸதா தர்சநம் பண்ண ப்ராப்தமான தேவரீருடைய திருமே

---

பும்ஸாம் - புருஷர்களுக்கு, மயி - நான், த்ருஷ்டிபதம் - கண்ணுக்கு விஷயமாயிருக்கையை, கதே - அடைந்திருக்கும் பொழுது, ஸர்வம் - எல்லாம், ஸம்பத்ஸ்யதே - கைகூடப் போகிறது, தஸ்மாத் - ஆகையினால், த்வம் - நீ, ஆத்மந: - உனக்கு, யதாபிமதம் - இஷ்டப்படி, வரம் வரய - வரத்தைக் கேட்டுக்கொள்.

இப்படிப் பகவான் ப்ரும்மாவை வினவியருளினபடியை ஒரு பாட்டாலே நிரூபித்தருளுகிறார்—' எந்நிலமும் ' என்றாரம்பித்து.

ப - ம். ] அன்ன முயர்த்த — ஹம்ஸத்தை வாஹனமாகவுடைய, செய்யோன் — ருஜுவான ஸ்வபாவத்தையுடைய ப்ரும்மா, அன்று - க்ருத யுகத்தில், எந்நிலமும் — எல்லாப் பூமிகளிலும், குரத்தால் - தன்னுடைய குளம்புகளினாலே, குறி செய்த - அடையாளம் செய்த, எழில் — ப்ரகாசமான, பரி கொண்டு - அச்வ மேத யாகம் செய்வதற்காக ஏற்படுத்தப்பட்ட குதிரையை முக்ய ஹவிஸ்ஸாக வைத்துக் கொண்டு, வேள்வி செய் - யாகம் செய்த, வேதியின் மேல் - உத்தர வேதியின் மேலே, நாதன் - ஸர்வ லோக நாதனான பகவான், முன்னிலையாகிய — முன்னே நிலையையுடைய, அதாவது எதிரே நிற்கிற, மூர்த்தியுடன் - திவ்யமங்கள விக்ரஹத்துடன், நான்முக ! - ஓ ! ப்ரும்மாவே, உனக்கு, மற்றும் வேறு - யாகத்தினுடைய இடையூறைப் போக்கினதைத் தவிர வேறான, என்ன வரம் - எந்த வரத்தை, தருவோம் - தரக்கடவோம், என்று, இயம்பினன் - சொன்னான். 23



னியை நான் கண்டு அநுபவிக்கப் பெற்ற இதுவொழிய வேறு எனக்கு வேண்டுவது ஒரு வரமுண்டோ ? அது ஒழிய ஸம்ஸாரிகள் பொய் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இனி உறுதபடி இங்கே தேவரீர் நித்யாவிர்ப்பூதராய் நின்று வேண்டுவார்க்கு வேண்டும் வரம் கொடுத்து வாழ்வித்தருள வேண்டும் என்றும்,

' வைகுண்டே து யதா லோகே யதைவ க்ஷீரஸாகரே | ததா ஸத்யவ்ரத க்ஷேத்ரே நிவாஸஸ்தே பவேதிஹ || ஹஸ்திசைலஸ்ய சிகரே ஸர்வலோக நமஸ்க்ருத

---

இப்படி எம்பெருமான் கேட்டருள, ப்ரும்மா ப்ரார்த்தித்த வரத்தையும், அப்படியே பகவான் க்ருபை செய்தருளினதையும் நிரூபித்து ப்ரும்மா தன்னுடைய ப்ரீத்யதிசயத்தினாலே பகவானை ஆராதித்து, அப்படிப்பட்ட ஆராதனத்தினுடைய க்ரமத்தையும் மற்றவர்களுக்கு உபதேசித்தான் என்று அருளிச்செய்கிறார்—' அப்பொழுது ' என்றாரம்பித்து. போய் நின்ற ஞானமும் - பொய்யாக நிற்கிற ஜ்ஞானமும், அன்றிக்கே பொய்யான வஸ்துக்களில் அப்ராப்யமானவற்றை ப்ராப்யமாக நினைத்தபடியினால் நிலை பெற்ற ஜ்ஞானமும், பொல்லா ஒழுக்கும் - துராசாரமும், அழுக்குடம்பும் - மலமயமான சரீரமும், இந்நின்ற நீர்மை - இப்படிப்பட்ட ஸ்வபாவத்தையே, இனி - இதற்குப் பிற்பட்ட காலத்திலும், உறுதபடி - அடையாமல் இருக்கும்படி. நித்யாவிர்ப்பூதராய் - எப்பொழுதும் ஆவிர்ப்பவித்திருப்பவராய்.

வைகுண்டே து யதா லோகே - வைகுண்ட லோகத்திலே எப்படியோ, யதைவ க்ஷீர ஸாகரே — திருப்பாற்கடலில் எப்படியோ, ததா - அப்படியே, இஹ — இந்த லோகத்தில், ஸத்யவ்ரத க்ஷேத்ரே — ஸத்யவ்ரத க்ஷேத்திரத்தில், தே - உமக்கு, நிவாஸ: - வஸிப்பதானது, பவேத் — உண்டாகட்டும், அதாவது அந்த இடங்களிலே போல இங்கும் நித்யமாக வஸிக்க வேண்டும், ஸர்வலோக நமஸ்க்ருதே - எல்லா ஜனங்களினாலும் நமஸ்காரம் செய்யப்பட்டிருக்கிற, ஹஸ்திசைலஸ்ய - ஸ்ரீ ஹஸ்திகிரியினுடைய

தெ। வுண்யகொடி விமாநெஷ்மிநு வஶ்யஞு ஷ்வாம் நராஸ்ஸதா ॥' என்றும் விண்ணப்பம் செய்தான்.

இப்படி ஸவூகாலத்திலும் ஸவூ ஷ்ராணிகளும் ஸாக்ஷாத்கரிக்கலாம்படி கோலம் செய்திங்ஙனே எழுந்தருளியிருக்க வேண்டு மென்று விண்ணப்பம் செய்ய,

'தெவதிய்யுஜநுஷ்யாணா மஹம் ப்ரத்யக்ஷதாம் கதஃ।
அத்ரைவ நிவஸிஷ்யாமி ஸத்யமெதத் ப்ரவீமி தெ ॥'

என்று இப்படி பெருமாள் அருளிச் செய்கையாலே க்ருதாயுஜனை ப்ரஹ்மா க்ரதுஶெஷத்தைத் தலைக்கட்டி, காதயுஷமயூ ப்ரக்ரியையாலே ஸம்வத்ஸர ஸமாராதநம் பண்ணி வரமாஹாமவதரான மஹஷிகளைக் குறித்துத் தான் பண்ணின அபிகமநாதிரூவா ஸ்ஸ்ரூ வாஞுகாலிக ஸமாராயநக்ரமத்தை ஸங்ரஹித்து உவஶெஶித்தான்.

---

ஶிவரெ – உச்சியில், அஸ்மிநு – இந்த, வுண்யகொடி விமாநெ - புண்யகோடி விமானத்தில், ஷ்வாம் – உம்மை, நராஃ – மனிதர்கள், ஸதா – எப்பொழுதும், வஶ்யஞு - பார்க்கட்டும், அதாவது ஸேவிக்கட்டும்.

அஹம் – நான், தெவதிய்யுஜநுஷ்யாணாம் – தேவதைகள், திர்யக்குகள், மனுஷ்யர்கள், இவர்களுக்கு, ப்ரத்யக்ஷதாம் கதஃ– ப்ரத்யக்ஷமா யிருக்கையை அடைந்தவனாய், அத்ரைவ–இங்கேயே, நிவஸிஷ்யாமி–வஸிக்கப்போகிறேன், ஏதத்–இதை, தெ-உனக்கு, ஸத்யம் - ஸத்யமாக, ப்ரவீமி - சொல்லுகிறேன். க்ரதுஶெஷத்தை - யாகத்தின் மிகுதியை. 'காதயுஷம'இத்யாதி–க்ருதயுகத்தில் செய்யக்கூடிய தர்மத்தின் ப்ரகாரத்தாலே. அபிகமநாதிரூவ - அபிகமனம், உபாதானம், இஜ்யை, ஸ்வாத்யாயம், யோக



சென்று மலர் பறித்து எந்நாதன் சேவடிப் போதுகந்து
நன்றென நீர் சுடர் தூப நன்முகவாச விலை கொடுத்துக்
கன்னலிலட்டுவத்தோ டன்னம் சீடைக் கறி படைத்துப்
பின்னும் செபித்தவன் பாதம் எண்ணுங்கள் முனிகளெ
ன்றான். 24

---

மென்னப்படுகிற. அஸ்ஸ்ரூ – இடைவிடாத. வாஞுகாலிக - ஐந்து காலங்களில் செய்யப்படுகிற. ஸமாராயந – திருவாராதன.

ப - ம். ] முனிகள் - ஓ ! ரிஷிகளே, முனிகாள் என்பது குறைந்து முனிகள் என்று கிடக்கிறது, சென்று - பகவத் ஸந்நிதிக்கு சென்று, இத்தால்

'அபிகம்ய ஹரிம் ப்ராதஃ'

என்று சொல்லப்பட்ட அபிகமனம் ஸங்க்ரஹிக்கப்பட்டதாகிறது, பகவத் ஸந்நிதிகளுக்குப் போய் அவ்விடத்தில் த்வய தத் விவரணாதிகளினாலே ப்ரபத்தியை அநுஸந்திக்கை அருளிச்செய்யப்பட்டது, 'தனி முதலடியிணை அடைபவர் தமரே' என்று இவர் தாமே ஸ்ரீ வைஷ்ணவ தினசரியில் அநுஸந்தித்தாரிறே, மலர் - புஷ்பங்களை, பறித்து, இத்தால் பகவதாராதனத்திற்கு உபயுக்தமான பாஹ்யோபகரண த்ரவ்யங்களை ஸம்பாதிப்பது குறிப்பிடப்பட்டதாகிறது, என் - என்னுடைய, நாதன் - ஸ்வாமியான பகவானுடைய, சேவடி - சிவந்த திருவடிகளாகிற, போது – புஷ்பங்களை, உகந்து - ப்ரீதி பூர்வகமாக ஆசைப்பட்டு, இத்தால் மானஸமான பூஜோபகரணங்களை ஸம்பாதிப்பது சொல்லப்பட்டதாகிறது, ப்ரீதி காரிதமாகவிறே ஸமாராதனம் தானும் இருப்பது என்று நித்யத்தில் நிரூபிக்கப்பட்டது, இத்தால் பகவானுடைய திருவடிகளில் ப்ரீதியை வ்ருத்திசெய்யக்கூடிய ஸ்ரீ ஸூக்திகளின் பரிசயமும் ஸூசிதமாகிறது, இப்படி உபாதானம் ஸங்க்ரஹிக்கப்பட்டது, நன்றென - நல்லது என்று சொல்லப்பட்ட, அதாவது ஶாஸ்திரங்களில் பூஜைக்கு உசிதங்கள் என்று விதிக்கப்பட்ட, நீர் – ஜலம், சுடர் - தீபம், தூப-தூபம், நன்-நல்ல, முகவாசவிலை-முகவாஸ தாம்பூலம் இவைகளை, கொடுத்து - ஸமர்ப்பிவித்து, கன்னல் - சர்க்கரை, இலட்டுவத்தோடு–லட்டுக்களுடன், அன்னம் – ஓதனம், சீடை, கறி – வ்யஞ்ஜனாதிகள், இவைகளை, படைத்து – நிவேதனம் செய்து, தனக்கு ப்ரீதிகரங்களாய் ஶாஸ்திரங்களில் விதிக்கப்பட்டவைகளாய் இருக்கும் த்ரவ்யங்களைக்

ஸநஞ்ச பெருமாளும் ஸதிஸந்துஷ்டராய் 'ப்ரஹ்மாவே! உனக்கு நான் தந்த ஸயிகாரக் குறை தீரும்படி ஸரஸ்வதீவர்விதிகள் முதலான யஜ்ஞவத்திகளுடனே உன்னுடைய லோகத்தேறச் சென்று ஸயிகார ஶேஷத்தை நடத்துவாய்' என்று அருளிச்செய்ய, ப்ரஹ்மாவும் ஸண்ணாஜவத்தி லோகங்களுக்கு மேலான ஸத்யலோகத்திலே சென்று ஸத்யவ்ரதக்ஷேத்ர மாஹாத்ம்யத்தையும் ஸத்யவ்ரதரான பெருமாள் திருவருளையும் ஸநாஸந்தித்துக் கொண்டு ஸம்வஷ்ண

---

கொண்டும் பல விதமான வ்யஞ்ஜனதிகளைக் கொண்டும் ஓதனதிகளைக் கொண்டும் நிவேதனம் செய்து என்றபடி, அதாவது ஔபசாரிக ஸாம்ஸ்பர்ஶிக ஸாந்த்ருஷ்டிக ஆப்யவஹாரிகங்களான எல்லா உபசாரங்களையும் ஸமர்ப்பித்து, இத்தால் இஜ்யை நிரூபிக்கப்பட்டது, பின்னும் - அதற்குப் பின்னால், செபித்து – மூல மந்திராதிகளை ஜபம் செய்து, இத்தால் ஸ்வாத்யாயம் நிரூபிக்கப்பட்டது, அவன் பாதம் – அவன் திருவடிகளை, எண்ணுங்கள் – த்யானித்துக்கொண்டிருங்கள், இத்தால் யோகம் சொல்லப்பட்டது, என்றான் – என்று சொன்னான். 23

சரித்திரத்தை நிகமனம் செய்தருளுகிறார் — 'ஸநஞ்ச' என்றாரம்பித்து. ஸயிகாரக்குறை – ப்ரும்மத்வமாகிற அதிகாரத்தினால் பகவானை அனுபவிக்காத குறை. ஶேஷத்தை - மிகுதியான காலத்தை. ஸண்ணாஜவத்தி – அண்டத்திற்குள்பட்ட. ஸத்யவ்ரதரான – 'நெருக்காத நீள்வ்ரதம்' என்றும்,

'ஸத்யஸங்கல்ப வ்ரதா ...'

என்றும் சொன்ன வ்ரதத்தை. பெருமாள் திருவருளையும்-பகவானுடைய க்ருபையையும். 'அருளே' என்று உபக்ரமித்ததையே ப்ரும்மாவிற்கு அனுக்ரஹம் செய்த வ்ருத்தாந்தத்தைக் கொண்டு இதுகாறும் நிரூபித்தருளி அத்தையே உபஸம்ஹாரம் செய்தருளுகிறார். ஸம்வஷ்ண குணதிகளினால் நிறைந்த. ஹகவத் நாஹவ - பகவானை அனுபவிப்பதினால் உண்டான. ரஸஹரித – ஆநந்தத்தினால் நிறை



ஹகவத் நாஹவ ரஸஹரித ஸமாயி விஶேஷத்தாலே ஹரிதார்த்தனாயிருந்தான்.

ஆழி நிலை வினைகடிவானய மேதமுடிந்ததற் பின்
வேழ மலை நாயகனார் விடை கொடுக்க விண்ணேறி
நாழிகையில் வானவரை மாற்றியிடு நான்முகன் தான்
ஊழியெலா மழியாத யோகமடைந்திருந்தானே. 25

---

ந்த, ஸமாயி விஶேஷத்தாலே – த்யான விஶேஷத்தினால், ஹரிதார்த்தனாய் – க்ருதார்த்தனாய்.

இந்த அர்த்தத்தையே ஒரு பாட்டாலே ஸங்க்ரஹித்தருளுகிறார் —' ஆழி ' எனறாரம்பித்து.

ப – ம். ] நாழிகையில் - அல்ப காலத்திற்குள், வானவரை – தேவதைகளை, மாற்றியிடும் – மாற்றி விடுகிற, நான்முகன் தான் – ப்ரும்மா, அதாவது தன்னுடைய கால அளவினால் மிகவும் ஸ்வல்பமான காலத்திற்குள்ளே இந்திராதி தேவர்கள் நாசத்தை அடைந்து விடுகிறபடியினால் அந்த ஸ்தானத்தில் வேறு சிலரை நியமிக்கிற ப்ரும்மா என்றபடி, ஆழி நிலை – ஸமுத்திரத்தின் நிலையைப் போன்ற நிலையையுடையதான, அதாவது அளவிறந்ததான, வினை – கர்மங்களை, கடிவான் - போக்கடிப்பதற்காக, செய்த் என்று ஒரு பதத்தைச் சேர்த்துக் கொள்ளவேண்டும், அயமேதம் – அஶ்வமேத யாகம், முடிந்ததற் பின் – முடிந்த பிறகு, வேழமலை நாயகனார் – ஸ்ரீ ஹஸ்திகிரிக்கு நாதனான ஸ்ரீ தேவப் பெருமாள், விடை கோடுக்க – நியமனம் கொடுத்தனுப்ப, விண்ணேறி ஸத்ய லோகம் சென்று, ஊழியெலாம் - கல்ப காலத்தை எல்லாம், அதாவது தன்னுடைய மிகுதி காலம் எல்லாம், அழியாத – நஶியாத, யோகம் – பகவத் த்யானத்தை, அடைந்திருந்தான் – செய்துகொண்டிருந்தான். 25

இப்படி க்ருத யுகத்தில் ஆஶ்ரிதருக்கு க்ருபை செய்தது மாத்திரமன்றியே மற்ற யுகங்களிலும் அப்படியே ஆஶ்ரிதர்களை அனுக்ரஹித்தருளிய க்ருபையையும் சுருக்கமாக நிரூபித்தருளுகிறார் —' ஆதியுகத்து ' என்றாரம்பித்து.

ஆதியுகத்தயன் கண்டிட நின்றவருள் வரதர்
காதலுயர்த்த களிற்றைத் திரேதையில் காத்தளித்து
வாதுயர் தேவ குருவுக்கிரங்கித் துவாபரத்தில்
சோதியநந்தன் கலியில் தொழுதெழ நின்றனரே. 26

ப — ம். ] ஆதியுகத்து — முதல் யுகமான க்ருதயுகத்திலே, அயன் — ப்ரும்மா, கண்டிட — ப்ரத்யக்ஷமாகப் பார்க்கும்படி, நின்ற — ஆவிர்ப்பவித்து ப்ரும்மாவிற்கு ஆராத்யராய் நின்ற, அருள் வரதர் — க்ருபையையே தனக்கு நிரூபகமாகவுடைய ஸ்ரீ தேவப்பெருமாள், திரேதையில் — திரேதா யுகத்தில், காதல் — பக்தியினால், உயர்த்த - உயர்ந்த என்பது மாறி உயர்த்த என்றிருக்கிறது, களிற்றை — ஸ்ரீ கஜேந்திராழ்வானை, தினம் தோறும் ஆயிரம் தாமரஸ புஷ்பங்களினால் பகவானுடைய திருவடிகளில் அர்ச்சனம் செய்து கொண்டு வந்து ஒரு நாள் அது செய்யப் பெறாமையினாலே மிகவும் ஶோகிக்கும்படியான ப்ரீதி விஶேஷத்தையுடையதாகையினால் காதல் உயர்த்த என்று நிரூபிக்கப்பட்டது, 'தொழும் காதல் களிறு' என்றிறே நம் கூடஸ்தர் அநுஸந்தித்தது, காத்து — ரக்ஷித்து, அளித்து — க்ருபையைச்செய்து, அதாவது முதலில் அதை முதலை வாயிலிருந்து காப்பாற்றி, அதின் மனோரதமான தன் திருவடிகளில் அர்ச்சனை செய்யவில்லையே என்கிற துக்கத்தைப் போக்கி, துவாபரத்தில் — த்வாபர யுகத்தில், வாது - வாதம் செய்வதில், உயர் — உயர்ந்த, தேவ குருவுக்கு — ப்ருஹஸ்பதிக்கு, இரங்கி — க்ருபையைச் செய்து, அதாவது தேவ ஸதஸ்ஸிலே தர்ம ஸம்ஶயம் வந்தபொழுது மத்யஸ்தமாக இருந்த ப்ருஹஸ்பதி பக்ஷபாதத்தினால் தர்ம விருத்தமாக முடிவு செய்ததினால் தேவதைகளினால் சபிக்கப்பட்டு, பூமியிலே துக்கப்பட்டுக்கொண்டிருந்தபொழுது இந்த க்ஷேத்திரத்தை அடைந்து பகவானை ஆராதித்து சாப விமோசனம் பெற்ற சரித்திர விஶேஷம் ஸூசிப்பிக்கப்பட்டதாகிறது, கலியில் — கலி யுகத்தில், சோதி — ப்ரகாஶம் நிறைந்த, அநந்தன் — திருவனந்தாழ்வான், தொழுது - ஆஶ்ரயித்து, எழ — உஜ்ஜீவிக்கும்படி, நின்றனர் - நின்றார், அதாவது அனந்த ஸரஸ்ஸு என்னும் தீர்த்த ரூபமாக பகவானை அனுபவித்துக் கொண்டிருக்கும்படி ஸேவை ஸாதிப்பது தெரிவிக்கப்படுகிறது. இத்தால் ப்ரும்மா பகவானை எல்லாக் காலத்திலும் இந்த க்ஷேத்திரத்தில் ஸேவை ஸாதிக்க வேண்டும் என்று ப்ரார்த்தித்ததைத் தலைக்கட்டினமை அருளிச்செய்யப்பட்டதாகிறது. 26



புண்டரீக முயர்த்த புராணனார்
பொய்யின் மாமக வுத்தரவேதியில்
கொண்டலாரருண் மாரி பொழிந்திடக்
கொண்டதோருயர் கூர் மதி யன்பினால்
பண்டை நான் மறை மௌலி படிந்த நான்

வக்த்ரு வைலக்ஷண்யத்தையும் விஷய வைலக்ஷண்யத்தையும் நிரூபித்தருளிக் கொண்டு இந்த ப்ரபந்தம் எல்லோருக்கும் உபாதேயம் என்று நிகமனம் செய்தருளுகிறார்—'புண்டரீகம்' என்றாரம்பித்து.

ப — ம். ] பண்டை — அநாதியான, நான் மறை — நாலு வேதங்களினுடைய, மௌலி — ஶிரஸ்ஸில், அதாவது உபநிஷத் பாகங்களில், படிந்த - ஶிக்ஷிதனான, அதாவது எப்பொழுதும் அவைகளையேபரிசயம் பண்ணி வந்த, நான், உபநிஷத்துக்களும் படிந்து நிற்கும்படியான பெருமையையுடைய நான் என்றாகவுமாம், அதாவது ப்ரபஞ்சத்திலுள்ள ஸர்வ வஸ்துக்களுக்கும் நாம ரூபங்களைக் கொடுத்தருளும் பகவானால் அநிதர ஸாதாரணமாகக் கொடுக்கப்பட்ட வேதாந்தாசார்யர் என்கிற பிருதைப் பெற்றிருந்தபடியினாலே வேதாந்தங்கள் தமக்கு ஶிஷ்ய ஸ்தானத்தில் நின்றமை விவக்ஷிதம், இப்படித் தாம் இந்தப் பிருதைப்பெற்ற விஶேஷத்தை இவர் தாமே

'விஶ்வஸ்மிந் ஸ்ருஷ்டிகாலே ... விஹிதவதா தேந தே வேந ஸத்தா', 'ஸ்வஸ்தி ஶ்ரீஸத்தம் யாஸந வேதாந்த வர்த்ர ... நிர்மாதாவாயுஷ்கம் வெஹ்கடேஶ:'

என்று அருளிச்செய்தாரிறே, புண்டரீகம் உயர்த்த — தாமரைப்புஷ்பத்தினால் வஹிக்கப்பட்டவரான, அதாவது அதை ஆஸனமாகவுடைய, புராணனார் — மிகவும் பழையவரான ப்ரும்மாவினுடைய, பொய்யில் - பொய்யில்லாத, அதாவது பகவானுடைய திருவடிகளை ஸாக்ஷாத்கரிப்பதற்காகவே அனுஷ்டிக்கப்பட்ட, மா மக — பெரியதான அஶ்வமேத யாகத்தினுடைய, உத்தர வேதியில் - உத்தர வேதியிலே, கொண்டல்- மேகம் போன்ற பகவான், ஆர் — நிறைந்த, அருள் மாரி — க்ருபையாகிற மழையை, பொழிந்திட - வர்ஷிக்க, கொண்டது — க்ரஹித்துக்கொள்ளப்பட்ட, அதாவது அவனுடைய க்ருபையினால் கிடைத்ததான, ஓர் — விலக்ஷணமான, உயர் - உயர்ந்த, அதாவது ஸர்வோத்க்ருஷ்ட

பாரில் மெய் விரதக் கவி பாடினேன்
தொண்டை மண்டல வேதியர் வாழவே
தூய தென் மறை வல்லவர் வாழவே. 27

மான, கூர் — தீக்ஷ்ணயமான, மதி அன்பினால்—ஜ்ஞானம் ப்ரீதி இவை களினால், அதாவது ஆழ்வாரைப்போலே தாமும் எம்பெருமானால்மயர் வற மதி நலம் அருளப்பெற்றமை விவக்ஷிதம், பாரில் — பூமியில், மெய் விரதக் கவி - ஸ்ரீ ஸத்யவ்ரத க்ஷேத்திர மாஹாத்ம்யத்தை, பாடினேன் - கீழ் நிரூபித்தபடியே அநுஸந்தித்தேன், இப்படிக் கவி பாடியதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார்—' தொண்டை மண்டல ' என்றாரம்பித்து, தொண்டை மண்டல — துண்டீரமண்டலத்தில் இருக்கும், வேதியர் — வேதாத்யயனம் செய்தவர்கள், வாழவே — வாழ்வதற்காக, காம்ய கர்மங்களையே அதிகமாக ப்ரதிபாதிக்கிற வேதங்களை அத்யயனம் செய்தவர்கள் பகவத்குணத்தை ஸாலபமாய் அநுஸந்திப்பதற்காக, தூய - பரிஶுத்தமான, தேன் மறை - த்ரவிட வேதங்களை, வல்லவர் - அப்யஸித்தவர்கள், அன்றிக்கே த்ரவிடவேத தாத்பர்யவித்துக்கள், வாழவே — வாழ்வதற்காக, அதாவது அஸாரம் அல்ப ஸாரம் கலந்திருப்பதினாலே

' த்ரைகுண்ய விஷயா வேதா: ', ' யாவாநர்த்த உதபாநே '

என்றிவை முதலியவைகளிற்படியே கழிக்க வேண்டிய பாகம் அதிகமாயும் உபாதேயமான பாகம் ஸ்வல்பமாயும் இருக்கிற வேதங்கள் போலன்றிக்கே

' ஸாரஸாரஸாரவிதாநாம் '

இத்யாதிகளிற்படியே நிருபாதிக ஸாரத்தையே முழுவதும் ப்ரதிபாதிக்கிறபடியினாலே பரமைகாந்திகளுக்கு மிகவும் உபாதேயமாகையினாலே 'தூய' என்கிற விஶேஷணம். அன்றிக்கே இது ' வல்லவர் ' என்பதற்கு விஶேஷணமாகவுமாம். அப்பொழுது ' இவை பத்தும் வல்லார்களைத் தேவர் வைகல் தீர்த்தங்களே என்று பூசித்து நல்கி உரைப்பர் தம் தேவியர்க்கே ' என்கிறபடியே நித்ய ஸூரிகளினாலும் தங்களுக்கு பரிஶுத்தியைத் தரக்கூடியவர்கள் என்று கொண்டாடப்படும் பாவனத்வத்தை உடையவர்கள் என்றர்த்தம், ' வாழ ' என்றது ' நண்ணாவசுரர் நலிவெய்த நல்ல அமரர் பொலிவெய்த எண்ணாதனகள் எண்ணும்



உய்விரத மொன்றின்றி அடைந்தாருய்ய
ஒரு விரதம் தான் கொண்ட உயர்ந்த மாலை '

நன்முனிவர் இன்பம் தலைச்சிறைப்ப பண்ணார் பாடலின் கவிகள் ' என்னப்பட்ட திருவாய்மொழியைப்போலே தேஶாந்தர வாஸிகளும் உஜ்ஜீவிக்கும்படியாகவும், ' தொண்டர்க்கமுதுண்ணச்சொன் மாலைகள் சொன்னேன ' என்கிறபடியே பாகவதோத்தமர்களுடைய கைங்கர்யமாகவும் அருளிச்செய்யப்பட்டது என்று தாத்பர்யம். இத்தால் இதின் ஆரம்பத்தில்

' ஸமஸ்தஜ்ஞருடைய ஹ்ருதயாரவிந்த நாயகமாக '

என்று உபக்ரமிக்கப்பட்டதே உபஸம்ஹாரம் செய்யப்படுகிறது என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. 27

இப்படித் தாம் இந்த ஸ்ரீ ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் என்னும் க்ரந்தத்தை அருளிச்செய்ததற்குக் காரணத்தை நிரூபித்தருளுகிறார்— ' உய்விரதம் ' என்றாரம்பித்து.

ப — ம். ] திசை படைத்த - திக்குக்களைப் படைத்தவனான, இது அவைகளிலிருக்கும் சேதநாசேதனங்களுக்கு உபலக்ஷணம், திசைமுகன்தான் — ப்ரும்மா, உய்விரதம் — உஜ்ஜீவிப்பதற்குக் காரணமான வ்ரதம், ஒன்றின்றி — ஒன்றுமில்லாமல், அதாவது உபாயாந்தர ஶூந்யராய், அடைந்தார் — ஶரணமாக அடைந்தவர்கள், உய்ய — உஜ்ஜீவிக்கும்படி, ஒரு விரதம் - ஒப்பற்றதான ஒரு வ்ரதத்தை, அதாவது ' நீள் விரதம் ' என்றும்,

' ஏதத்வ்ரதம் மம '

என்றும் சொல்லப்படுகிற வ்ரதத்தை, இங்கு ' ஒரு ' என்றது பகவானுக்கு ஶரணாகத ஸம்ரக்ஷணம் ஒன்றுமே வ்ரதம், வேறு வ்ரதம் இல்லையென்றபடி, அதாவது மாலி ஸுமாலி யுத்தத்தில் பட்டோடின மால்யவான், முதுகுகாட்டி ஓடும் அளவிலும் பின் தொடர்ந்து பாண ப்ரயோகம் செய்த பகவானைப் பார்த்து

' நாராயண ந ஜாநீஷே க்ஷாத்ரம் தர்மம் ஸநாதநம் '

என்று கேட்க, பகவானும்

' ததேதத் ந ஹ்வாநுஷ்டே '

என்றிறே பதிலுரைத்தது, அதாவது ' நீயும் என்னை நாராயண என்று கூப்பிட்டாய், அந்த நாராயண தர்மமானது ஶரணாகத ஸம்ரக்ஷணமே,

செய் விரதமொன்றுலும் தெளியகில்லாச்
சிந்தையினுல் திசை படைத்த திசைமுகன்றன்
பொய் விரத நிலமெல்லாம் போயே மீண்டு
புகலிதுவே புண்ணியத்துக்கென்று சேர்ந்த
மெய் விரத நன்னிலத்து மேன்மையேற்றி
வேதாந்த வாசிரியன் விளங்கினனே. 28

---

அத்தையே நாம் இப்பொழுது பரிபாலிக்கிறோம்' என்று ஸமாதானம் அருளிச்செய்தாராயிற்று, அன்றிக்கே ஒருகாலத்திலும் ஒருவராலும் ஒருபடியாலும் கலக்க முடியாத விரதம் என்றபடி. இந்த விரதத்தினுடைய விஶேஷத்தை 'இது தான் ஓதுமிருக்காலும் எழின் முனிவர் நினைவினுலும் இவையறிவார் செயலுடன் என் இசைவினுலும் நெருக்காத நீள் விரதம் எனக்கொன்று' என்று இவர் தாமே அருளிச்செய்தாரிறே. தான் கோண்ட — தான் அங்கீகரித்த, அதாவது தன்னை ஆஶ்ரயித்தவர்கள் ஒரு வ்ரதமும் அநுஷ்டிக்க வேண்டாதபடி பண்ணுகிறுன், அவர்கள் பல வ்ரதங்களைச் செய்து பெற வேண்டும் பலங்களை எல்லாம் தான் ஒருவனே கொடுத்தருளுகிறுனென்றதாயிற்று, உயர்ந்த — இவ்விதமாக ஆஶ்ரிதர்களை ரக்ஷிப்பதில் ஸர்வோத்க்ருஷ்டரான, மாலே - ஆஶ்ரிதர்களிடத்திலுள்ள வ்யாமோஹமே ஒரு வடிவு கொண்டாப்போலே இருக்கிற பகவானை, 'மாலே மணிவண்ணு' என்று உபநிஷத்து உத்கோஷித்ததிறே, செய் — அநுஷ்டிக்கப்பட்ட, விரதம், ஒன்றுலும், தெளியகில்லா — ஸாக்ஷாத்கரிக்கமுடியாமையினுல் உண்டான, சிந்தையினுல் - துக்கத்தினுலே, பொய்விரத நில மெல்லாம் — தன்னிடத்தில் செய்யப்பட்ட வ்ரதங்கள் எல்லாம் பலிக்காமையினுலே பொய்யான வ்ரதத்தையுடைய பூமி எல்லாவற்றையும், போயே மீண்டு — அங்கங்கு போய்த் திரும்பி வந்து, 'போயே' என்றது போகாத இடமே இல்லை என்றபடி, இதுவே - இந்த ஸத்ய வ்ரத க்ஷேத்திரமே, புண்ணியத்துக்கு, புகல் — உபாயம், என்று — என்று நிரூபித்து, சேர்ந்த — வந்தடைந்த, மெய் விரத — ஸத்ய வ்ரதமாகிற, நன்னிலத்து - நல்லக்ஷேத்திரத்தினுடைய, மேன்மை — உத்கர்ஷத்தை, அ தா வ து ஏற்றி — ஸ் தோ த் தி ர ம் செய்து, வேதாந்தவாசிரியன் - வேறு ஒருவருக்கும் கிடைக்காத வேதாந்தாசார்யர் என்கிற



சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்,
தாராரருளாளர் தாள் நயந்து—சீராக
மெய்விரத நன்னிலத்து மேன்மை யிது மொழிந்தான்
கையில் கனி போலக் கண்டு. 29

கவிகயக வஞ்வக வெஷ்யஞ
ஶாஸ்ஷ்டிவொக உஹ நீயடு ।

---

பிருதையுடைய இந்த ஆசார்யன், விளங்கினனே - ஸர்வோத்க்ருஷ்டனுக ப்ரகாஶித்தான். 28

ப - ம். ] சீர் — கல்யாண குணங்களினுல், ஆரும் - பூர்ணமான, தூப்புல் - தூப்புல் குடியில் அவதரித்தருளின, திருவேங்கடமுடையான் — ஸ்ரீ வேங்கட நாதன் என்கிற திருநாமத்தையுடைய ஸ்வாமி, 'சீராரும்' என்கிற விஶேஷணத்தினுல் 'வென்றி புகழ் திருவேங்கட நாதனென்னும் குருவாய்' என்னப்பட்ட ஏற்றம் தெரிவிக்கப்படுகிறது, அந்தத் திருவேங்கடமுடையானும் தன்னை அடுத்த தொண்டைமான் சக்ர வர்த்திக்கு இதுவே எல்லா மங்களங்களையும் கொடுக்கக்கூடியது என்று உபதேஶித்த இவர் விஷயமான தனியனிலும் ஸ்ரீமாந் என்னும் விஶேஷணத்தை ப்ரயோகித்தானிறே, தாரார்-புஷ்பமாலைகளினுல் பூர்ணமாயிருக்கிற, அருளாளர்—ஸ்ரீதேவப்பெருமாளுடைய, தாள்—திருவடிகளை, நயந்து — ஆசைப்பட்டு, அதாவது அவைகளையே ப்ராப்யமாக அத்யவஸித்து, மெய் விரத நன்னிலத்து - ஸத்ய வ்ரத க்ஷேத்திரத்தினுடைய, இது - இந்த, மேன்மை - மாஹாத்ம்யத்தை, சீராக - குணங்களினுல் நிறைந்ததாக, அதாவது

'வாமெ௵ வெயெ வ உயாஶ'

என்கிற மேன்மை பெறுவதற்காக, கையில் — உள்ளம் கையில் வைக்கப்பட்ட, கனிபோல - பழத்தைப்போல, கண்டு — ஸாக்ஷாத்கரித்து,

'வாணாவாஉறுகං யயா'

என்றது இங்கனுஸந்தேயம், மொழிந்தான் - சொன்னுன். 29

இப்படித் தாம் ஒரு க்ரந்தம் அருளிச்செய்ததற்குக் காரணத்தை நிரூபித்துக்கொண்டு நிகமனம் செய்தருளுகிறுர்—'கவிகயக' என்றாரம்பித்து.

ஸத்யவ்ரத க்ஷேத்ரமாஹாத்ம்யம் வ்யதநுத
ஸுலலிதமிதி வேங்கடேசார்ய: ||

இதி கவிதார்க்கிக ஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு

|| ஸ்ரீ ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் ஸம்பூர்ணம் ||

|| ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: ||

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.



ப – ம்.] கவிதார்க்கிக ஸிம்ஹ: – கவிதார்க்கிக ஸிம்ஹம் என்கிற பிருதையுடைய, வேதாந்தாசார்ய: – வேதாந்தாசார்யன் என்னும், வேங்கடேசார்ய: - ஸ்ரீ வேங்கட நாதனென்கிற ஆசார்யன், த்ரிலோக மஹநீயம் – மூன்று லோகங்களினாலும் கொண்டாடத் தகுந்த, ஸத்யவ்ரத க்ஷேத்ர மாஹாத்ம்யம் - ஸத்ய வ்ரத க்ஷேத்திரத்தின் மாஹாத்ம்யத்தை, இதி – இந்த விதமாக, ஸுலலிதம் – எளிதாக, வ்யதநுத – செய்தார், அதாவது ஸம்ஸ்க்ருத பாஷையில் கடினமாயிருந்ததை எல்லோரும் ஸுலபமாய் அறியக்கூடியதான த்ரமிட பாஷையில் ராக தாளத்துடன் அநுஸந்திக்கும்படி அருளிச்செய்தார். ஆக இதுவே இந்த க்ரந்த நிர்மாணத்திற்குக் காரணம் என்பதும் ஸூசிப்பிக்கப்பட்டதாகிறது.

ஸ்வஸ்தி ஸ்ரீமத்வேதாந்ததேசிகமணி
ஸ்ரீஜந்மதாரோத்ஸவே
ஹஸ்திக்ஷமாதரவைபவஸ்ய விவ்ருதிம்
யத்தேநமாநோ: வாஶயோ: |
கஸ்மிம்ஶ்சித் ஸ்ரீநிதிமுக்ஷணாஹியமாநே
ஸாவ்யாயிதோ வ்ருஷ்டிபி:



ஸ்ரீமத்தேசிகஸூக்திஸம்ஹிதவிவ்ருதி
ர்வ்யாக்யாதவிக்யாதிமாந் ||

திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத் விஷயம்
பண்டித பூஷணம் தேசிக தர்ஶநாசார்யர்
ஸ்ரீ உப். வே. மஹாமஹோபாத்யாய
நரஸிம்மாசார்யர் ஸ்வாமியின்

**வ்யாக்யானம்** முற்றிற்று.

|| ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ||

|| ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸராமாநுஜ மஹாதேசிகாய நம: ||

—0—